# நாலாயிரத்தில் நான் இரசித்தவை



முனைவர் எஸ். சந்திரா

# நாலாயிரத்தில் நான்

# இரசித்தவை

முனைவர் **ஏஸ். சந்திரா**

**திருமலை திருப்பதி**
**தேவஸ்தானத்தின் நிதி உதவி**
**பெற்று பதிப்பிக்கப்பட்டது.**

**ஸ்வாதி பதிப்பகம்**

32, ராமகிருஷ்ணா நகர்,
புதுச்சேரி - 605 003.

# நூலகம்

| | | |
|---|---|---|
| நூற்பெயர் | : | நாலாயிரத்தில் நான் இரசித்தவை |
| பொருள் | : | பக்தி நூல் |
| மொழி | : | தமிழ் |
| ஆசிரியர் | : | முனைவர் எஸ். சந்திரா |
| முதற்பதிப்பு | : | மே 2007 |
| படிகளின் எண்ணிக்கை | : | 1000 |
| விலை | : | ரூ. 40.00 |
| மொத்தப் பக்கங்கள் | : | 90 |
| வெளியிட்டோர் | : | ஸ்வாதி பதிப்பகம்<br>32, ராமகிருஷ்ணா நகர்,<br>புதுச்சேரி - 605 003.<br>போன்: (0413) 2339204<br>செல் : 9442109204 |

<u>அச்சிட்டோர் :</u>

**டேட்டா ஆப்செட்**

பகத்சிங் வீதி, பாரதிபுரம்,

புதுவை - 11. போன் : 6457230

# பொருளடக்கம்

# 1. திருவேங்கட காட்சிகள்

முன்னுரை:

'தெள்ளியார் வணங்கும் மலைத் திருவேங்கடம்' 'செங்கயல் திளைக்கும் சுனைத் திருவேங்கடம் "தீர்த்த நீர்த் தடம் சோலை சூழ் திருவேங்கடம்" திண் திறல் அரியாயவன் திருவேங்கடம்' என்றவாறும் இன்னும் பலவாறும் போற்றப்படுகிறது உலகுக்கு எலாம் தேசமாய்த் திகழும் மலையான திருவேங்கடம்.

அந்த மலைக்குச் சென்று 'நாயேன் வந்து அடைந்தேன், நல்கி ஆள் என்னைக் கொண்டருளே' என்று வேண்டுவோர்க்கு வேண்டியதை வழங்குபவன் வேங்கடத்தான்.

கண் ஆய், ஏழ் உலகுக்கு உயிர் ஆய எம் கார்வண்ணனை, விண்ணோர் தாம் பரவும் பொழில் வேங்கட வேதியனை தரிசிக்கும் ஆவலில் திருமலைக்கு விரையும் பக்தர்களுக்கு சீர் ஆர் திருவேங்கட மாமலை மேய ஆரா அமுதனை எப்பொழுது காண்போம் என்ற தவிப்புதான் அதிகமாக இருக்கும்.

இது நம்போன்ற சராசரி மனிதர்களின் நிலை! ஆனால் ஆழ்வார்கள் திருமலையானை வணங்க செல்லும் பொழுது வழியில் தென்படும் பல்வேறு காட்சிகளையும் பார்த்து அனுபவிப்பதுடன், அவற்றையெல்லாம் சொற்சித்திரங்களாக தம் பாசுரங்களில் தந்திருக்கிறார்கள். இப்பொழுது திருமலைக்குச் செல்லும் அடியார்களுக்கு அத்தகைய அழகிய காட்சிகளைக் காணும் அரிய வாய்ப்பு கிடைக்காமலிருக்கலாம். ஆனால் நாலாயிர திவ்யப் பிரபந்தத்தைப் படிக்கும் நல்வாய்ப்பு நமக்குக் கிடைத்திருக்கிறது. அந்த பாசுரங்களைப் படிக்கும்பொழுது

அவர்கள் வர்ணித்த அத்தனை காட்சிகளும் நம் கண்முன் உலாவருவதை உணரமுடியும். அத்தகைய சில வர்ணனைகளை இப்பொழுது நாம் காணலாம்.

**மனித வாழ்க்கை:**

மனிதராய் பிறந்த ஒவ்வொருவருடைய குறிக்கோளும் வாழ்வில் ஒரு முறையாவது திருவேங்கடவனைக் கண்ணார காண வேண்டும்! அப்படியிருக்க அந்த மலையிலேயே வாழும் வாய்ப்பு கிடைத்தவர்கள் எவ்வளவு புண்ணியம் செய்தவர்கள்! பலவிதமான மனிதர்கள் அங்கு வாழ்ந்தாலும் குறவர்கள் வாழ்க்கைதான் குறிப்பாக பெரிதும் விவரிக்கப்படுகிறது. அதைச் சற்று பார்ப்போம்.

அங்குள்ள குறவர் தலைவர்கள் வயதான தங்கள் ஆயுள் முடிவு காலத்திலும் காட்டுப் பன்றிகள் உழுதநிலங்களிலே தினைகளை விதைக்கிறார்கள் என்கிறார் பேயாழ்வார்.

முடிந்த பொழுதில் குறவாணர் ஏனம்
படிந்து உழுசால் பைந்திணைகள் வித்த (2370)

அது மட்டுமல்ல, அங்கு வாழும் குறவர்கள் புனத்தில் மேயும் யானைகளை விரட்ட விரும்புகிறார்கள். சாதாரணமாக கவண்கல் எறிவார்கள். ஆனால் திருமலை குறவர்கள் வேங்கடவன் அருளால் செழிப்பாக வாழ்வதால் மாணிக்கங்களை வீசி எறிகிறார்களாம். ஊர்ந்து செல்லும் பாம்புகள் அவற்றைப் பார்த்துவிட்டு மின்னல் என எண்ணி மழை வரப்போகிறது என்ற பயத்தில் தம் புற்றுகளில் போய் புகுந்து கொள்கின்றன என்கிறார் பொய்கையாழ்வார்.

ஊரும் வரி அரவம் ஒண் குறவர் மால் யானை பேர
எறிந்து பெருமணியைக் கார் உடைய மின் என்று
புற்று அடையும் வேங்கடமே (2119)

அங்கே உள்ள குறத்திகள் திருமலை தவிர வேறிடம் செல்லாதவர்கள். அவர்கள் விளையாடும் பொழுது அழகிய வளையல் அணிந்த கைகளால், ராகுவின் பிடியில் அகப்பட்ட சந்திரனை ராகுவிடமிருந்து விடுவிக்கும் அளவிற்கு சந்திர மண்டலத்தளவும் ஓங்கி வளர்ந்துள்ள மூங்கில்களை வளைக்கிறார்கள் என பேயாழ்வார் கூறுகிறார்.

குன்று ஒன்றின் ஆய குறமகளிர் கோல் வளைக்கை
சென்று விளையாடும் தீம் கழைபோய் - வென்று
விளங்கு மதிகோள் விடுக்கும் வேங்கடமே (2353)

திருவேங்கடத்து தினைப்புனங்களில் வஞ்சிக்கொடி போன்ற குறவ இன பெண்கள் பரண்கள் மேலிருந்து காவல் புரிவார்கள் (1025) என்றும் குறப்பெண்களோடு வண்டுகள் குறிஞ்சிப் பண் பாடும் (1049) என்றும் திருமங்கை ஆழ்வார் கூறுகிறார்.

மேலும் வேடர்கள் முற்றிய அகிற்கட்டைகளை நெருப்பில் இடுவதால் எழும் புகை திருவேங்கட மலை எங்கும் பரவுகிறது - கானவர் இடு கார் அகில் புகை ஓங்கு வேங்கடம் (1048) என திருமங்கை ஆழ்வாரும், வேடர்கள் இம்மலையில் வில் எடுத்து யானைகளை வளைந்து சூழ்வார்கள் - எப்பாடும் வேடு வளைக்கக் குறவர் வில் எடுக்கும் வேங்கடமே (2427) என திருமழிசை ஆழ்வாரும் வேங்கடத்தில் வாழும் வேடர்களின் வாழ்க்கைக் காட்சிகளை அழகாக விவரித்திருக்கிறார்கள்.

## பக்தி வாழ்க்கை

பொருளில்லார்க்கு இவ்வுலகமில்லை என்பதால் உலகின் பல்வேறு பகுதிகளில் வசிப்பவர்கள் பல்வகை தொழிலில் ஈடுபட்டு தம் வாழ்க்கையை நடத்துகிறார்கள். ஆனால் அவர்கள் அருளில்லார்க்கு அவ்வுலகமில்லை என்பதை உணரும்பொழுது

அலைந்தேன் வந்து அடைந்தேன், அடியேனை ஆட் கொண்டருளே என்று அடைக்கலம் புக அடைவது திருமலையைதான்!

உடற்காரணமாக வரும் கர்மங்களையும் நோய்களையும் போக்கிக் காப்பவன் அவன் (2415) என்கிறார் திருமழிசை ஆழ்வார். மேலும் திருமலை தன்னுடைய நீர்மை தன்மையால் நம் பாவங்களைப் போக்குகிறது (2423) எனவும் இவ்வுலகின் நல் வாழ்வுக்குப் பிறகு பரமபதம் சென்று ஆள விரும்புகிறவர்கள் அனைவரும் திருவேங்கடமுடையானை வழிபட்டு மலர்கள் இட்டு வணங்கியவரே ஆவார் (2471) எனவும் கூறுகிறார் ஆழ்வார்.

அதேபோல் மலை சந்தனக் குழம்பையும் ஆபரணங்களையும் பட்டாடைகளையும் மணம் கூடிய மல்லிகை மாலைகளையும் எடுத்துக் கொண்டு ஆதிகாரணன் ஆகிய ஞானபெருமான் திருவேங்கடவனின் இரு திருவடிகளில் வழிபட்டு துதித்துப் பணிவது அடியார்களுக்கு ஏற்றதாகும் (2257) என்கிறார் பூதத்தாழ்வார்.

இத்தகைய சிறப்பு வாய்ந்த பக்தியையுடைய அடியார்களும் வானவர்களும் திருமலையானை எப்படியெல்லாம் வணங்குகிறார்கள், அங்கு வாழும் உயிர்களின் பக்திவாழ்க்கை எப்படியிருக்கும் என்பதையும் இப்பொழுது பார்க்கலாம்.

திருவேங்கடத்தில் துவாதசி அன்று வாள் போன்ற ஒளிக் கண்களுடைய பெண்கள் பூமாலையுடன் தூபத்தை ஏந்தி செல்லும்பொழுது அந்த தூபப்புகை வானை மறைத்து விண்மீன்களை ஒளிமங்க செய்யும் உயர்வான காட்சியை விவரிக்கிறார் பொய்கையாழ்வார் (2163) மேலும் அவர் கூறுகிறார்-நுண்ணிய கேள்வி ஞானம் உடைய வேதியர்கள் பல்வேறு திசைகளில் தினமும் தூபம், தீபம், மலர், நீர்

ஆகியவற்றை ஏந்தியபடி திருமலைக்குச் சென்று வணங்குவர்.

வகை அறு நுண் கேள்வி வாய்வார்கள் நாளும்
புகை விளக்கும் பூம் புனலும் ஏந்தி - திசை திசையின்
வேதியர்கள் சென்று இறைஞ்சும் வேங்கடமே (2118)

மாலை வேளைகளில் திருவேங்கடமுடையானுக்குத் திருவந்தி காப்பு இடுவதற்காக சந்திரனைச் சடையில் வைத்த சிவனும் தாமரையில் பிறந்த பிரமனும் திரு முத்துக்குடை முதலிய வழிபாட்டுப் பொருட்களுடன் செல்வதை (2424) விவரிக்கிறார் திருமழிசை ஆழ்வார். அத்துடன் நித்திய சூரிகள் வேங்கடமலை பெருமானின் திருவடி தாமரைகளில் பக்தியுடன் பூக்களைப் பரிமாறி துதித்து, வீழ்ந்த மரம் போலே கிடந்தபடி வணங்குவர் (2426) என்றும் கூறுகிறார்.

அது மட்டுமல்ல, திருமலையே எல்லாமாக எண்ணி தியானத்தில் மூழ்கியிருக்கிறார் ஒருவர்,தியானம் மிக தீவிரமாக இருந்ததால் தலைமுடி அதிகமாக வளர்ந்து பெரும் சடாமுடியாக ஆனதை கூட அறியவில்லை அவர். அப்பொழுது அருகிலிருந்த பூங்கொடிகள் சடாமுடியை சிறிய மலையென நினைத்து அதன்மேல் படர தொடங்குகின்றன. இந்த காட்சியை பூதத்தாழ்வார் விவரிப்பது எப்படி?

நெறியார் குழல்கற்றை முன்நின்று பின் தாழ்ந்து
அறியாது இளங்கிரி என்றெண்ணி - பிரியாது
பூங்கொடிகள் வைகும் பொருபுனல் குன்று என்னும்
வேங்கடமே யாம் விரும்பும் வெற்பு (2234)

ஆறறிவு படைத்த மனிதர்களுக்கு ஆராயும் அறிவு இருப்பதால் உலகின் எந்த பகுதியில் இருந்தாலும் இறைவனிடம் பக்தி செலுத்தும் பண்பு அமைவதில் ஆச்சரியம் ஏதுமில்லை. ஆனால் விலங்குகளிடமும் அந்த குணம் இருப்பதை திருமலையில் மட்டுமே காண முடியும் என தோன்றுகிறது.

அதனால்தான் வேங்கடவனுக்கு விளக்கு ஏற்றி வைத்து வணங்க விரும்பிய யானை ஒன்று விளக்கைத் தேடி சுற்றும் முற்றும் பார்த்தது. அப்பொழுது சந்திரன் கண்ணில் பட தன் துதிக்கையை உயர தூக்கி, நிலவைப் பிடிக்க முயல்கின்ற காட்சியை விவரிக்கிறார் திருமழிசை ஆழ்வார்.

வைப்பன் மணி விளக்கா மா மதியை மாலுக்கு என்று
எப்பொழுதும் கை நீட்டும் யானையை (2427)

அது மட்டுமல்ல, திருவேங்கடத்திலுள்ள யானை மதநீராலே வாயை கழுவிக்கொண்டு, அருவிபோல் விழும் அந்த நீராலே கால்களைக் கழுவியவாறு முதலில் தன் உடலை சுத்தமாக்கிக் கொண்டு பூஜைக்குத் தயாராகிறது. பின் துதிக்கையாலே தேன் துளிர்க்கும் மலர்ந்த பூக்களை எடுத்து திருவேங்கடவனின் பாத கமலங்களில் இட்டு வழிபடும் காட்சியை பேயாழ்வார் அனுபவித்து பாடுகிறார் (2351)

யானைகளுக்கு நாங்கள் ஒன்றும் குறைந்தவர்கள் அல்ல என காட்ட விரும்பிய வானரங்களின் வழிப்பாட்டைப் பார்ப்போமா? திருவேங்கடத்தில் குரங்குகள் காலையில் கண்விழித்ததும் சுனைகளில் மலர்ந்த பூக்களைப் பறித்து பெருமானிடம் இட்டு துதி செய்வதை பூதத்தாழ்வார் 'போது அறிந்து வானரங்கள் பூஞ்சுனை புக்கு ஆங்கலர்ந்த போது அரிந்து கொண்டு ஏத்தும்' (2253) என கூறி விளக்குகிறார்.

இவ்வாறெல்லாம் அடியார்களின் அருமையான வழிபாட்டை வர்ணிப்பதன் மூலம் பெருமானை வணங்க வேண்டும் என்ற ஆர்வத்தை நம் மனதிலும் தோன்ற செய்கிறார்கள் ஆழ்வார்கள். அவனை வணங்குபவர்கள் தமக்குச் செல்வம் உள்ளதென்று இறுமாப்புக் கொள்ளார், இருந்த செல்வம் அழிந்ததே என்றும் தளரார் (226) என்று பூதத்தாழ்வாரும், இனிய துழாய் மாலை அணிந்தவனைப் பிரியாமல் இருக்க

விரும்பி தினமும் அவனை வணங்குபவர்களின் வினைகளை திருமலை தீர்க்கும் (2107) என்று பொய்கையாழ்வாரும் பாடியிருப்பதைப் படித்ததும் பக்தியின் பயனை நாமும் புரிந்து கொள்கிறோம்.

**விலங்கியல் வாழ்க்கை:**

மனிதர்களுக்கும் விலங்குகளுக்கும் பக்தி முக்கியந்தான், இருந்தாலும் அதையும் தாண்டி ஒரு தனிவாழ்க்கை அமைவது தவிர்க்க இயலாதது. அந்த வாழ்க்கையில் காதல், பயம், ஏமாற்றம் போன்ற நவரசங்களில் சில நயமாக இடம் பெறுவதும் இயற்கையே!

முதலில் பூதத்தாழ்வார் அறிமுகம் செய்யும் ஓர் அன்பான தம்பதியை பார்ப்போம் மேகம் எனக் களிறு சேரும் (மேகங்கள் போல யானைகள் சேர்ந்து உலாவும் - 3554) திருமலையில் வாழும் ஓர் ஆண்யானையும் பெண் யானையும் தான் அவர்கள்! மதநீரைப் பெருக்கும் ஆண் யானை, தன் பெண் யானைக்கு, இரு கணுக்களை உடைய மூங்கில் குருத்தைப் பறித்து அருகே காணப்படும் தேனில் அதனைத் தோய்த்து கொடுக்கும் அன்பை அழகாக விவரிக்கிறார். (2256)

பூதத்தாழ்வார் யானை தம்பதியைக் காட்டினால் பேயாழ்வார் ஒரு வானர ஜோடியைக் காட்டுகிறார். திருமலையின் பனிப்பாறை ஒன்றின் மேல் அமர்ந்திருக்கும் பெண் குரங்கு (மானிட பெண்கள் தம் கணவரிடம் கேட்பது போல) தன் கணவனான கடுவன் குரங்கை நோக்கி வெண்மையான சந்திரனைப் பிடித்துக் கொடுக்குமாறு கேட்கிறதாம். 'தெளிந்த சிலா தலத்தின் மேல் இருந்த மந்தி அளிந்த கடுவனையே நோக்கி, விளங்கிய வெண் மதியம் தா என்னும் வேங்கடமே' (2339)

மகிழ்ச்சியான வானர தம்பதியை வாழ்த்தும் நாம் சினமடைந்த ஆண் யானையைக் கண்டு சற்று பின் வாங்குகிறோம். மதம் கொண்ட அந்த யானை தன் பெண் யானையுடன் கலந்து உறவாடிய பின் துணை பிரிந்து சென்று விடுகிறது. அதனால் சினமடைந்துள்ள ஆண் யானை மணிப்பாறைகளில் மோதுகிறது. அவ்வாறு மோதும் பொழுது வீரமுடைய அதன் கொம்புகளிலிருந்து முத்துகள் உதிர்வதை சொல்லோவியமாக தீட்டுகிறார் பேயாழ்வார் (2326)

அமைதியான யானைக்கே சினம் வரும்பொழுது வேகமுடைய வேங்கை புலிகளுக்கு சினம் வருவதில் என்ன ஆச்சரியம் இருக்கிறது? பேயாழ்வார் காட்டும் சினமுடைய வேங்கை புலிகள் பரந்த கொடுமுடியிலே தம் கீழ் வயிறு தேய்த்து உலாவுகின்றன. அந்த நேரத்தில் வெண்மையான சந்திரனில் முயல் உருவம் தெரிகிறது. தன் உணவாகிய முயலைப் பிடிக்கவும் முடியாமல், அதே நேரம் அகலவும் மனமில்லாமல் ஒரு வேங்கை நிலவைப் பார்த்தப்படியே நின்று கொண்டிருக்கும் காட்சியும் இரசிக்கதக்கதே! (2356)

சினம் கொண்ட உயிர்களைப் பார்த்த நாம் ஒரு மாறுதலுக்கு பயம் கொள்ளும் உயிரினங்களைப், பார்க்கலாம், திருமலையில் வில்லும் அம்பும் உடைய குறவர்கள் தங்கள் கைகளில் சிவந்த நெருப்பு பந்தங்களுடன் போய் கொண்டிருக்கிறார்கள். அதைக் கண்டு பயப்படும் யானைகள் வயலை விட்டு நீங்கி செல்ல ஆரம்பிக்கின்றன. அப்பொழுது வானிலிருந்து விழும் விண்மீன்களைக் காண்கின்றன. அரண்டவன் கண்ணுக்கு இருண்டதெல்லாம் பேய் என்பதுபோல விண்மீன்களை சற்று முன் பார்த்து நெருப்பு பந்தம் என எண்ணி பயந்த யானைகள் ஓடுகின்ற காட்சியை பொய்கை ஆழ்வார் அழகாக அனுபவிக்கிறார். (2121)

பயந்த யானையை பொய்கை ஆழ்வார் காட்ட பயந்த வானரத்தை பேயாழ்வார் நமக்குக் காட்டுகிறார். மலையில் உள்ள சுனைநீரில் ஓர் ஆண் குரங்கு தன் அழகை () இரசிக்க எண்ணி எட்டிப் பார்க்கிறது. அதில் தெரிந்த தன் நிழலையே வேறொரு குரங்காக எண்ணி பயந்து அந்த இடத்தை விட்டு வேறிடம் செல்கிறது. அங்கு கிடைக்கும் கரிய களாப்பழத்தைப் பறிக்க கைகளை நீட்டுகிறது.

பார்த்த கடுவன் சுனைநீர் நிழல் கண்டு
பேர்த்து ஓர் கடுவன் எனப் பேர்ந்து - கார்த்த
களங்கனிக்குக் கைநீட்டும் வேங்கடமே (2349)

பயந்த மிருகங்களைப் பார்த்த பிறகு சண்டையிடும் மிருகங்களைப் பார்ப்பது ஒரு வித்தியாசமான அனுபவம்! திருமலையில் யானை தன் துதிக்கையால் மேகங்களைக் குத்துகிறது. அதை கண்டு கோபம் கொண்ட யாளி, யானையின் கொம்பை முறித்து வாய் விட்டலறி விழும்படி செய்கிறது என்கிறார் பேயாழ்வார்.

களிறு முகில் குத்த, கைஎடுத்து ஓடி
ஒளிறு மருப்ப ஒசிகை யாளி - பிளிறி
விழ கொன்று நின்று அதிரும் வேங்கடமே (2352)

**இயற்கைக் காட்சிகள்:**

இனி திருமலையில் ஆங்காங்கே காணப்படும் அழகிய இயற்கைக் காட்சிகளைக் காணலாம், வாருங்கள்.

திருமலையின் நிலவளத்தை விவரிக்கும் பேயாழ்வார், வெட்டிய பிறகும் ஓங்கி வளர்ந்த மூங்கில்கள் அங்கு வான் நோக்கி வளரும் சிறப்புடையது (தழிந்து எழுந்த வேய்ங்கழை போய் விண் திறக்கும் வேங்கடமே 2376) என்கிறார்.

திருவேங்கடத்தின் நீர்வளத்தைப் பற்றி கூறும்போது. அங்கு அருவிகள் சந்திர மண்டலத்திலிருந்து கிளம்புவது போல, அதாவது பெரும் உயரத்திலிருந்து விழுவதுபோல மிகுந்த ஒலியுடன் விழுகின்றன. (பிறை வாய்ந்த வெள்ளத்தை அருவி விளங்கு ஒலிநீர் வேங்கடத்தான் - 2320) எனவும் விண் ஒடுங்கக் கோடு உயரும் வீங்கு அருவி வேங்கடத்தான் (2321) எனவும் அவர் கூறுகிறார்.

நம்மாழ்வார் 'வார்புனல் அம்தண் அருவி வட திருவேங்கடத்து எந்தை' (3172) எனவும், ஆண்டாள் நாச்சியார் 'வான்கொண்டு கிளர்ந்து எழுந்த மா முகில்காள்! வேங்கடத்து தேன் கொண்ட மலர் சிதறத் திரண்டு ஏறிப் பொழிவீர்கள்' (581) எனவும், திருமங்கை ஆழ்வார் 'கல்தேன் பாய்ந்து ஒழுகும் கமலச்சுனை வேங்கடவா' (1036) எனவும் திருமலை நீர்வளத்தை விவரிக்கிறார்கள்.

அதே காட்சிகளை திருமழிசை ஆழ்வார் சற்று வித்தியாசமாக விவரிக்கிறார். அங்கு மழைகாலத்தில் அருவிகள் மணிகளைத் தள்ளிக் கொண்டு விழும்பொழுது அவற்றின் பலத்த ஓசையைக் கேட்கும் யானைகள் இடியோசை என எண்ணி அஞ்சுகின்றன. சிதறிய மணிகளை மின்னல் என நினைத்த மலைப்பாம்புகள் புற்றில் ஒடுங்குகின்றன (2420).

மேலும் திருவேங்கடமலையில் அருவிநீர் கொட்டும் பொழுது மணிகளும் முத்துக்களும் சிதறி விழும் ஒலி மட்டுமல்ல, திருவோண விழாவில் பக்தர்கள் பல்லாண்டு பாடும் ஒலியும் வேத ஒலியும் சேர்ந்து கேட்கும் (2422) எனவும் கூறுகிறார் திருமழிசை ஆழ்வார்.

அருவிகளை வர்ணித்தவர் அவை வீழும் காடுகளை பற்றியும் கூறுகிறார் திருமலை காடுகளில் யாளிகள், வலிய சிங்கங்கள், பொன், மாணிக்கம், முத்து பூத்த மரங்கள் யாவும்

உள்ளன என்றும் குரங்குகளும் வேடுவர்களும் இங்கே அதிகம் காணப்படுவர் (2428) என்றும் கூறுகிறார்.

முடிவுரை:

இவ்வளவு சிறப்பும் செழிப்பும் உடைய திரு வேங்கடத்தை வாய்ப்பு கிடைக்கும் போதெல்லாம் சென்று வணங்க வேண்டுமென்ற ஆசை தோன்றுகிறதல்லவா? அதுதான் திருமலையின் தனித்தன்மை!

வேங்கடமே விண்ணோர் தொழுவதுவும் மெய்ம்மையால்
வேங்கடமே மெய்வினை நோய் தீர்ப்பதுவும் - வேங்கடமே
தானவரை வீழத் தன் ஆழிப்படை தொட்டு
வானவரைக் காப்பான் மலை (2429)

என திருமழிசை ஆழ்வாரும் மற்றவர்களும் போற்றும் திருமலைக்குச் சென்று நாமும் அவனருள் பெற்று உய்வோம்.



# 2. ஆழ்வார்கள் அனுபவித்த உவமைநயம்

முன்னுரை

பொருளே உவமஞ் செய்தனர் மொழியினும்
மருளறு சிறப்பினஃதுவம மாகும் - தொல்காப்பியம் 1229

பொருள் என்பது புலவன் பாடற்பொருளாகச் சொல்ல நினைக்கும் கருத்து. உவமை என்பது அப்பாடற் செய்தியை விளங்க மேற்கொள்ளும் ஓர் உத்தி.

சூது என்னும் அதிகாரத்தில் சூதாடி, கைப்பொருளை இழக்க இழக்கச் சூதின் மேல் மேலும் ஆசை கொள்வது போன்று உயிர் துன்பத்தில் உழல உழல உடல்மேல் மேலும் பற்றுக் கொள்ளும் என 940 ஆவது குறளில் வருவது போல சொல்ல நினைக்கும் முதன்மை பொருள் உவமையாகவும் மாறி வரும்.

எது எப்படியாயினும் உவமை என்ற உத்தியைப் பயன்படுத்தி புலவன் தன் கருத்தை அதிக அழகோடு தெளிவாக தெரியப்படுத்த முடிகிறது. உதாரணமாக ஓட்டையிலே ஒழுகுவது போல நீரை ஒழுகவிடும் இரு விழியும் என பாரதிதாசன் கூறும்பொழுது அந்த எளிய உவமை வருத்தப்படும் ஓர் உயிரை அப்படியே நம்முன் காட்டுகிறது.

அத்தகைய சிறப்பு வாய்ந்த உவமை நயத்தை வெளிக் கொணராத புலவர்களே இருக்க மாட்டார்கள் என்று கூட சொல்லலாம். அப்படியிருக்க நம் ஆழ்வார்கள் மட்டும் அதற்கு விதிவிலக்கா என்ன? பெருமாளைப் போற்றி பாடும் திவ்ய பிரபந்த பாடல்களில் பக்திச்சுவையோடு சேர்த்து இலக்கிய சுவையையும் பரிமாற வேண்டும் என நினைத்த ஆழ்வார்கள் ஆங்காங்கு

உவமைநயம் ஒளிரும் பாடல்களையும் தந்துள்ளார்கள். இரசிக்கத்தக்க அவற்றுள் சிலவற்றையாவது இங்கு காண்போம்.

## ஆண்டாள்

முதலில் ஆண்டாள் அனுபவித்த உவமை நயத்தை நாமும் அனுபவிப்போம். 'நீர் இன்று அமையாது உலகெனின் யார் யார்க்கும் வான் இன்று அமையாது ஒழுக்கு' என்ற வள்ளுவர் வாக்கின்படி இன்றியமையாததான மழை பெய்ய வேண்டும் என இறைஞ்சும் ஆண்டாள், அந்த மழையை எப்படி வர்ணிக்கிறார், தெரியுமா? மேகங்கள் எல்லாம் ஊழி முதல்வன் உருவம் போல மெய் கறுத்துக் காணப்பட, அழகான தோளுடை பத்மநாபன் கையில் உள்ள சக்கரம் மின்னுவது போல மின்னல்கள் மின்ன வேண்டும், மழை அவன் கையில் உள்ள வலம்புரி சங்குபோல முழங்க வேண்டும், பெருமானின் சார்ங்கம் என்ற வில்லிலிருந்து புறப்பட்டுப் பொழியும் அம்பு மழையைப் போல வான்மழை பொழிய வேண்டும்.! இயற்கையிலும் இறைவனையும் அவனைச் சார்ந்த பொருட்களையுமே காண்கிறார் ஆண்டாள்.

திருப்பாவையில் மேற்கண்டவாறு உவமை கூறிய ஆண்டாள், நாச்சியார் திருமொழியில் வேறொரு அருமையான உவமையைக் காட்டுகிறார். தன்னுடைய வாழ்க்கை இறைவனுக்காகவே அர்ப்பணிக்கப்பட்டது, அதை மனிதரோடு சம்பந்தப்படுத்துவது தகாது என கூற வந்தவர் வானிடை வாழும் அவ்வானவர்க்கு மறையவர் வேள்வியில் வகுத்த அவிர்பாகத்தை காட்டில் திரியும் நரி புகுந்து, முகர்ந்து எடுத்துக் கொள்ளல் தக்கதன்று என்பதன் மூலம் எடுத்துக் காட்டுகிறார்.

முன்பு இயற்கைக்கு இறைவனை உவமையாக கூறிய ஆண்டாள், அவனுடைய கையில் உள்ள பாஞ்ச சன்னிய சங்கைப் பார்த்ததும் 'தடவரையின் மீதே சரத்கால சந்திரன்,

இடை உவாவில் வந்து எழுந்தாலே போல்'-சரத்காலத்தின் முழுநிலா நாளன்று பெரிய மலையிலே சந்திரன் உதயமாகி ஒளி விடுவது போல தோன்றுவதாக அழகாக கூறுகிறார்.

அடுத்ததாக பெருமானையே நினைத்து ஏங்கி வாடும் ஒரு தலைவி உலங்கு என்னும் ஜாதிவகையைச் சேர்ந்த கொசுக்கள் புகுந்து உண்ட விளாம்பழம் ஒன்றுமில்லாமற் போவது போல, தன்னுள்ளே புகுந்த பிரிவு என்னும் நோய் தன் நலன்களை உண்டு விட்டதாக கூறி வருந்துவதும் இரசிக்கதக்கது.

அது மட்டுமா, அழகான கண்ணனை வர்ணிக்கும் போது கையாளும் உவமைகளும் அழகானவை, உதய கிரியில் விரிகின்ற சூரியன் போல, கறுத்த மேனியில் செம்மையான முகம் பெற்றவன் (உருவு கரிதாய் முகம் செய்தாய் உதயப் பருப்பதத்தின் மேல் விரியும் கதிரே போல்வானை) மின்னலும் மேகமும் கலந்தாற்போல் உடம்பில் வனமாலை விளங்குபவன் (கணங்களோடு மின் முகம் கலந்தாற் போல் வனமாலை மினுங்க நின்று விளையாட) என்றெல்லாம் கூறுகிறார்.

## முதலாழ்வார்கள்

ஆண்டாள் அருளிய பாசுரங்களில் உள்ள உவமை நயத்தை உளமார அனுபவித்த நாம் இனி முதலாழ்வார்கள் மொழிந்த உவமை நயத்தையும் இரசிப்போம்.

பொய்கையாழ்வார் ஒரு பெரும் விளக்கை நம் கண்முன் காட்டுகிறார். வையம் தகளியா, வார்கடலே நெய் ஆக, வெய்ய கதிரோன் விளக்காக - அதாவது பூமியே அகலாக விளங்க, அதில் ஊற்றப்படும் நெய்யாக கடல் இருக்க, வெப்பக் கதிர்களுடைய சூரியன் தீப ஒளியாக திருமால் ஏற்றியுள்ளான் என்கிறார் அவர்.

அதேபோல் பூதத்தாழ்வாரும் ஒரு விளக்கை உவமையாக்கி பாசுரம் அருளினாலும், அவர் ஏற்றும் விளக்கு வித்தியாசமானது. அவர் 'அன்பே தகளியா, ஆர்வமே நெய் ஆக இன்பு உருகு சிந்தை இடு திரியா, நன்பு உருகி ஞானச்சுடர் விளக்கு' ஏற்றுகிறார். ஞான வடிவமான ஆத்மா கரையப் பெற்று பரமஞானமாகிய சுடர்விடும் விளக்கை ஏற்ற அவரைப் போன்ற அடியார்களால் மட்டுமே முடியும்.

மேலும் அவர் பெருமானைத் தேடி ஓடும் தன் மனம் 'அம்கோல் தேடி ஓடும் கொழுந்ததே போன்றதே மால்தேடி ஓடும் மனம்' என கூறி, பரந்து வளரும் கொடிகளின் கொழுந்துகள் படருவதற்குக் கொம்பைத் தேடுவதைப் போல இருப்பதாக தெளிவுபடுத்துகிறார். கொம்பைப் பற்றிய கொடி மேலே மேலே படர்ந்து செல்வதைப் போல, இறைவனைப் பற்றிய மனமும் உயர்ந்து சிறப்புறும் என்ற கருத்து எவ்வளவு ஆழமானது!

இதே கருத்தை பொய்கையாழ்வார் எவ்வாறு கையாளுகிறார் தெரியுமா? ஆறு கறுத்த அலை கடலையே நோக்கி செல்வதைப் போலவும், ஒளி உள்ள தாமரைப் பூ உயரத்தில் உள்ள சூரியனைப் பார்த்தே மலர்வதைப் போலவும் ஞானம் அடைந்தவர்கள் திருமகளின் கேள்வனையே அறிவார்கள். (பெயரும் கருங்கடலே நோக்கும் ஆறு, ஒண்பூ உயரும் கதிரவனே நோக்கும்.... ஒண் தாமரையாள் கேள்வன் ஒருவனையே நோக்கும் உயர்வு) என்ற அழகான உவமையால் அறிவுறுத்துகிறார். இங்கு கறுத்த கடல் நிறத்தையும் சூரியன் ஒளி தோற்றத்தையும் உருவகிக்கும்.

யாராவது வெளியில் செல்லாமல் தடுக்க வேண்டுமென்றால் அறையில் வைத்து திண்ணிய கதவை அடைத்து நல்ல தாழ்ப்பாளைப் போடுவது வழக்கம். அதையே

உவமையாக கூறி, நம் ஐம்புலன்களும் தவறான வழியில் செல்லாதபடி தடுக்க விரும்பினால் தியானம் என்ற கதவின் மூலமாகவும் ஞானம் என்ற தாழ்ப்பாளின் மூலமாகவும் செய்ய வேண்டும் என்கிறார் பேயாழ்வார் - 'அறிவு என்னும் தாள் கொளுவி ஐம்புலனும் தம்மில் செறிவு என்னும் திண் கதவம் செம்மி'

## நம்மாழ்வார்

இனி நம்மாழ்வார் நவிலும் நயத்தையும் சற்று காண்போம்.

பொதுவாக கரும் மேகங்களைப் பார்ப்பவர்கள் அவை யானைகளைப் போல அல்லது எருதுகள் போல இருப்பதாக கூறுவதுதான் வழக்கம். ஆனால் நம்மாழ்வார் வேறு விதமாக கூறுகிறார். உலகமே நடுங்கும்படி எருதுகள் தங்களுக்குள் கால்களைக் கீறியபடி போர் செய்து தம் உடல் நீரைச் சிந்துவது, அவருக்கு வானில் மேகங்கள் மோதி மழை பொழிவது போல தோன்றுகிறதாம் இந்த உவமை எப்படி?

பெண்களின் கண்களை மீன்களுக்கு உவமையாக சொல்வது வழக்கந்தான். இருந்தாலும் அதையே நம்மாழ்வார் சொல்லும்போது தனி நயம் தெரிகிறது. தலைவியின் வருத்தத்தைக் கண்டு வேதனைபடும் தோழி, தண்ணீர் தளும்பும் குளத்தில் கயல் மீன்கள் பிறழ்வது போல பிரிவு துன்பத்தால் கண்ணீர் தளும்பும் விழிகள் அங்கும் இங்கும் அலை பாய்கிறது என்கிறார். 'செழு நீர்த் தடத்துக் கயல் மிளிர்ந்தல் ஒப்ப, சேயரிக் கண் அழு நீர் துளும்ப அலமருகின்றன'

மேலும் தாமரையையும் செங்கழுநீர் பூவையும் ஒத்த தலைவியின் மைக்கண்களிலிருந்து வடியும் கண்ணீர் துளிகள்

முத்துக்கள் போல ஒளி விடுகின்றன எனவும் நம்மாழ்வார் நயம்பட கூறுகிறார்.

பொதுவாக வேதங்களை நன்கு கற்றுணர்ந்த வைதிகர்கள் இறைவனைத் துதித்து அவன் திருவடிகளைத் தம் தலைமேல் சூடுவார்கள். அத்தகைய சாஸ்திரஞானம் இல்லாதவர்களும் அவர்களைப் பின்பற்றி துதிப்பார்கள். அதாவது இறைவனை ஞான கண்ணால் கண்டவர்கள் செய்வதை காணாதவர்களும் செய்கிறார்கள். இதற்கு அழகான உவமையைக் கூறுகிறார் நம்மாழ்வார். மேய சென்ற பசுக்கள் ஊர் திரும்புகின்றன. ஊர் வந்து சேர்கிறபொழுது, வீடு நெருங்கி விட்டதை உணர்ந்த பார்வையுள்ள பசுக்கள் கன்றைப் பார்க்கப்போகும் சந்தோஷத்தில் கனைக்கின்றன. அதைக் கேட்டு குருட்டுப்பசுவும் கனைப்பதைப் போல அச்செயல் இருக்கிறதாம்.

முதற்பெருங்கடவுளான ஸ்ரீமந் நாராயணன் இருக்கிற பொழுது மூலை தேவதைகளை சிலர் ஆராதிப்பதைக் காணும் நம்மாழ்வார் மிகவும் வருந்துவதுடன் அதற்கு ஓர் உவமையும் கூறுகிறார். தாழ்ந்த புத்தியுடைய சிலர் பெற்றதாயைக் கவனிக்காமல், எந்த ஓர் உபசாரமும் செய்யாமல் இருந்துவிட்டு மணைக் கட்டையை நீராட்டி உபசரிப்பதுபோல இருக்கிறது அவர்கள் செயல் என்கிறார்.

விரிந்த வானில் சிதறி கிடக்கும் விண்மீன்களைக் காணும் நம்மாழ்வாருக்கு அவை தாதுக்களுடன் கூடிய பூக்களை வரிசையாக தூவி தெளித்தாற்போல் உள்ளன. இது சாமான்யனுக்கும் தோன்ற கூடியது. ஆனால் சிறந்த பக்தரான நம்மாழ்வாருக்கு அதே காட்சி இன்னும் சிறப்பாக தெரிகிறது. அவைகளைப் பார்த்தால் எம்பெருமான் உலகளந்த பொழுது, அவன் திருவடி விண்ணை எட்டியபொழுது தேவர்கள் கூடி வழிபட தூவிய பூக்களாக தோன்றுகின்றனவாம். (2645)

அடுத்ததாக நம்மாழ்வார் ஒரு பெருங்குடையை நம் கண் முன் வி(வ)ரிக்கிறார். ஆகாயந்தான் அந்த அழியாத குடை அதற்கு விண்மீன்களே இலைக் காம்புகளாகவும், சந்திரனே குடைக் காம்பின் நுனியிலுள்ள வெள்ளிக் குண்டலமாகவும் காணப்படுகின்றன. அந்த குடைக்கு அழகான உயர்ந்த காம்பு எது தெரியுமா? உலகளந்தவன் எடுத்த பெரிய வடிவமே அந்த குடைக்கு ஏற்ற நீலமணி காம்பாக உள்ளதென்கிறார் நம்மாழ்வார். (மீன் என்னும் கம்பில் வெறி என்னும் வெள்ளிவேய், வான் என்னும் கேடு இலாவான் குடைக்குத்தான் ஓர் மணிக் காம்பு போல் நிமிர்ந்து மண் அளந்தான் - 2646)

## பெரியாழ்வார்

அடுத்து நாம் அனுபவிக்கப் போவது பெரியாழ்வார் காட்டும் உவமை நயத்தை. அவர் காட்டும் ஒரு சின்ன காட்சி கூட உவமை நயத்தை வெளிப்படுத்துகிறது. பலதேவன் முன்னே ஓட அவனைப் பிடிக்க கண்ணன் ஓடுவதைக் கண்டால் மொடுமொடுவென்று முன்னே ஓடும் வெள்ளி மலைக் குட்டியைத் தொடர்ந்து கறுத்த மலைக்குட்டி ஓடுவது போல் உள்ளது என்கிறார்.

முன்நல் ஓர் வெள்ளிப் பெருமலைக் குட்டன்
மொடுமொடு விரைந்து ஓடப்
பின்னைத் தொடர்ந்தது ஓர் கருமலைக் குட்டன்
பெயர்ந்து அடியிடுவது போல் (190)

கண்ணன் வாயிலிருந்து உமிழ்நீர் ஓடி வருவதைப் பார்க்கும் பொழுது பெரியாழ்வாருக்கு இரண்டு விதமான உவமைகள் தோன்றுகின்றன. அதனைப் பார்த்தால் கருப்பஞ்சாற்று குடத்தின் மூடி திறந்து அதன் வழியே ஓடும் சாறு போல உள்ளது (89)

என ஒரு பாசுரத்தில் கூறுபவர், வேறொரு பாசுரத்தில் மலர்ந்த தாமரைப் பூவிலிருந்து குளிர்ந்த தேன் துளித்து விழுவது போல கண்ணனின் அகன்று சிவந்த வாயிலிருந்து உமிழ்நீர் ஊறி ஊறி முறிந்து விழுகிறது என சுவையாக கூறுகிறார்.

படர் பங்கய மலர்வாய் நெகிழப்
பனிபடு சிறுதுளி போல்
இடங் கொண்ட செவ்வாய் ஊறிஊறி
இற்று இற்று வீழ நின்று (92)

கண்ணனின் அரையில் சாத்தியுள்ள மணி கணகணவென்று ஒலிப்பது, முரட்டுக்காளையின் கழுத்தில் உள்ள மணி ஓசை போல் கேட்கிறது எனவும் (92) கரிய மலை தாழ்வரையின் மேல் ஒளி வீச அருவிகள் விழுவது போல, கண்ணன் அரையில் அணிந்துள்ள சங்குமணி வடம் தாழ்ந்துயர்ந்து தொங்குகிறது எனவும் நயம்பட கூறுகிறார்.(93)

அடுத்ததாக கண்ணனின் நடையழகை வர்ணிக்கும் போது ஒரு யானை மூன்றுவகை மதங்களைப் பெருக விட்டுக் கொண்டு தன் காலில் இட்ட சங்கிலி சலார்-பிலார் என ஒலிக்கவும் பொன் கயிற்றில் தொங்குகிற மணி ஒலி உண்டாக்கவும் மெள்ள நடப்பது போல கண்ணன் நடக்கிறான் - 'தொடர் சங்கிலிகை சலார்-பிலார் என்னத் தூங்கு பொன்மணி ஒலிப்பப்படு மும்மதப் புனல் சோர வாரணம் பைய நின்று ஊர்வது போல்' என்கிறார்.

இதே போல் கண்ணன் தன் சிவந்த மேட்டுவாயில் வெண்மையான முத்துப்பற்கள் தோன்ற சிரிப்பது, செவ்வானத்தின் நடுவே நுனிக் கிளையில் பிறைச்சந்திரன் முளைத்துத் தோன்றுவதுபோல உள்ளது (87) என்றும் அவன் திருவரையில் அணிந்துள்ள பொன் பின்னலும் அரசிலைக் கோவையும் பொன் நிற சிற்றாடையும், மின்னல் கொடியோடு

சேர்ந்த வெண்மையான சந்திர மண்டலமும் அதைச் சூழ்ந்த ஒளி வட்டமும் போல அழகாயுள்ளன (88) என்றும் அவர் கூறுவது நயமானவை!

## திருமங்கை ஆழ்வார்

திருமங்கை ஆழ்வாரின் பாசுரங்கள் அனைத்திலும் பக்திச்சுவையோடு இலக்கிய நயமும் இணைந்தே காணப்படுவது நாம் அறிந்ததே! அத்தகைய நயமிக்க பாசுரங்கள் சிலவற்றை இப்பொழுது இரசிக்கலாம்.

ஒரு தலைவன் தன் காதலியை அலட்சியம் செய்யும் நேரத்தில் அவனிடம் தலைவியின் தாய் பேசுவது போல அமைந்த காட்சியில் பல உவமைகளை சர்வ சாதாரணமாக உபயோகிக்கிறார். 'காலமெல்லாம் வேள்வியையே செய்யும் அந்தணன் தோட்டத்தைப் புறக்கணித்துப் பாழாக்குவது போல என் மகளை நீ அலட்சியம் செய்யலாமா? அவளை வாயில் விடும் தண்ணீரைக் கொப்பளிப்பதும் பருகுவதும் போல அலட்சியம் செய்யாதே, கோழி முட்டை உடைக்க குறுந்தடி தேவையா? எருக்கிலையை எறிய கோடாலியையா எடுப்பார்கள்? இவளை கையில் கருப்புக்கட்டி போல தின்னவும் தூக்கிப் போடவும்படி மிக எளிதாக எண்ணுகிறாயே! கோயில் முற்றத்தில் உள்ள முருங்கை மரத்தேன் போல இவள் எளியவள் ஆகி விட்டாளா?' என்றெல்லாம் அழகான உவமைகளை உபயோகித்துள்ளது படித்துப் படித்து இரசிக்க வேண்டியவை!

ஒரு தாயின் தவிப்பை விளக்க மட்டுமல்லாமல் ஒரு பக்தனின் பதைபதைப்பையும் எடுத்துரைக்க உவமைகள் உதவுகின்றன. மீண்டும் பிறவி எடுக்க அஞ்சி, அவர் கூறுகிறார் 'மீண்டும் பிறவி வந்துவிடுமோ என சூறைக்காற்றில் அகப்பட்ட மரக்கலத்தில் இருப்பவர்போல நெஞ்சு நடுங்குகிறேன்.

(காற்றறத்திடைப்பட்ட கலவர் மனம் போல ஆற்றத் துளங்கா நிற்பன் 2023) பிறவி என்பது ஒரு கூரை வீட்டில் பாம்புடன் கூடி வாழ்வது போல உள்ளது. (2024) இரண்டு பக்கங்களிலும் நெருப்பு எரியும் கொள்ளிக்கட்டையின் உள்ளே அகப்பட்ட எறும்புபோல என் மனம் உருகுகிறது.(2025) வெள்ளத்தில் மாட்டிக் கொண்ட நரி கூட்டம் போல உள்ளம் தடுமாறுகிறது. (2020) ஆற்றங்கரைவாழ் மரம் போல அஞ்சுகின்றேன்' என்றெல்லாம் எளிமையான உவமைகளால் விளக்குகிறார்.

அவர் இரணியவதத்தை, ஒரு பயங்கரமான காட்சியைக் கூட ஓர் அழகான இயற்கைக் காட்சியாக தீட்டுகிறார். அணிகலன்களுடன் விளங்கிய இரணியன் மார்பிலிருந்து புறப்பட்ட இரத்த வெள்ளம், தங்கமயமான மலையிலிருந்து அருவி கொட்டுவது போல பெருகியது என்பதை 'இரணியன் இலங்கு பூண் அகலம் பொங்கு வெம்குருதி பொன்மலை பிளந்து பொழி தரும் அருவி ஒத்து இழிய!' என்ற சொற்சித்திரம் விளக்குகிறது அல்லவா?

பொதுவாக மகளிரின் கண்கள், முகம் முதலானவை மலர்களை ஒத்திருப்பதாக கூறுவது வழக்கம், ஆனால் திருமங்கை ஆழ்வார் அதை மாற்றி, சிறுபுலியூரில் ஒக்க கறுத்திருக்கும் நீல பூக்களும் அரக்கு நிற ஆம்பலும் தாமரையும் செங்கழுநீரும் சேர்ந்து அங்கு வாழும் பெண்களின் கண்களையும் வாய்களையும் முகங்களையும் ஒத்து உள்ளன (1633) என கூறும் நயம் சற்று வித்தியாசமாக இருக்கிறது.

ஆழ்வார் திருமாலின் மார்பழகை எவ்வாறு நயமாக வர்ணிக்கிறார் என பார்ப்போம். எம்பெருமான் தன் மலை போன்ற மார்பில் அணிந்திருக்கும் ஆரம், கார் மேகத்தில் மின்னல் பளிச்சிடுவது போல இருக்கிறதாம் (பெரிய வரை மார்பில் பேர் ஆரம் பூண்டு கரிய முகிலிடை மின்போல

தெரியுங்கால்) என ஓரிடத்தில் கூறுபவர், திருத்தோள்களில் சாத்தின மாலை, மை போன்று இருண்ட மலையில் இரு பக்கமும் தாழ்ந்து விழும் அருவி போல உள்ளது என வேறொரு பாசுரத்தில் கூறுகிறார்.

வழக்கமான உவமை கூட ஆழ்வார்கள் கூறினால் மேலும் அழகாகிறது. தலைவனால் இரசிக்கப்படாத அழகும் இளமையும் வீண் என்பதற்கு திருமங்கை ஆழ்வார் கூறும் உவமை கல்லென்னும் ஓசை கேட்கும் காட்டில் உள்ள பூங்கொடியின் மணம் வீசும் மலர் யாராலும் அனுபவிக்கப்படாமல் வீணாக நிலத்தில் உதிர்வது போல என்பதாகும்.

கல் நவிழும் காட்டகத்து ஓர் வல்லிக் கடிமலரின்
நல் நறுவாசம் மற்று ஆராலும் எய்தாமே
மன்னும் வறுநிலத்து வானாங்கு உகுத்தது போல.

திருமங்கை ஆழ்வார் திருக்கோவலூர் தலத்திற்கு உவமையாக பொன்வேலை செய்யப்படும் பட்டரையைக் கூறுகிறார். எப்படி? அங்கு பூத்துள்ள கருநெய்தல் பூக்கள் கரி போலவும் புன்னை மலர்கள் முத்தையும் பொன்னையும் போலவும் தாமரை மலர்கள் விளக்குகள் போலவும் விளங்குவதால்தான் இந்த உவமை!

**முடிவுரை:**

பொதுவாக காதலன் தன் காதலியை வர்ணிக்கும் போது நிறைய உவமைகளை உபயோகிப்பது வழக்கம். உதாரணமாக முறிமேனி முத்தம் முறுவல் வெறி நாற்றம், வேலுண் கண் வேய்த்தோ ளவட்கு (1113) என்ற குறளில் மூங்கில் போன்ற தோள்கள், மாந்தளிர் வண்ணமேனி, வெறியூட்டும் நறுமலர் மணம், வெண் முத்து போன்ற பற்கள்,

வேல்போன்ற கண்கள் என பல உவமைகள் பயின்று வந்துள்ளதைப் பார்த்திருக்கிறோம்.

ஆனால் அருட்சுவை மிகுந்த திவ்ய பிரபந்த பாடல்களில் அழகான உவமைகளை ஆழ்வார்கள் பயன்படுத்தியிருப்பதைப் படிக்க படிக்க சுவையாக இருக்கிறது. எனவே எந்த மதத்தினராக இருந்தாலும் தமிழ்மொழி மேல் ஆர்வம் கொண்டவராக இருப்பின் இதை ஒரு பக்தி நூலாக பார்க்காமல் ஒரு நல்ல இலக்கிய நூலாக அறிந்து, படித்து அனுபவிப்பார்கள் என்பது நிச்சயம்.



# 3. நாலாயிரத்தில் நான் கண்ட நயம்

முன்னுரை

இலக்கியம் ஒரு தனி உலகம். நினைப்பளவில் அந்த நல்லுலகத்திற்குச் சென்று மகிழ்ந்து வாழ முடியும். வாழ்ந்து பழகப்பழக உரிமையும் இன்பமும் மேன்மேலும் பெருகச் செய்யும் உலகம் அது என்றார் தமிழறிஞர் மு. வரதராசனார்.

இலக்கியத்தின் பொருள் வாழ்வாகும். அதன் சுவை உணர்ச்சியாகும். புலவன் தன் கருத்தினைக் கற்பார் மனதில் பதிய வைப்பதற்கும் கற்பனை மனம் வேண்டும். தன் கருத்தினைப் பிறர் உணருமாறு செய்வதற்கு இலக்கிய நயம் மிகுந்த பாடல்களின் துணையை மேற்கொள்வது வழக்கம்.

எழில் மிகுந்த இயற்கைக் காட்சியைக் காணும் ஓவியன் அந்த அழகிற்கு நிலைத்த வடிவம் கொடுக்க திரைச் சீலையில் வண்ணங்களைக் கொண்டு வரைகிறான். ஆனால் அதே காட்சியை கவிஞன் தன் பாடலில் சொல்லோவியமாக தீட்டுகிறான். உதாரணத்திற்கு 'தண்டலை மயில்கள் ஆட தாமரை விளக்கந் தாங்க' என தொடங்கும் கம்பராமாயண பாடலில் (பால காண்டம் - நாட்டுப்படலம் - பாடல் 4) ஒரு சோலையையே கண்முன் காட்டுகிறார் கம்பர்.

ஆக, வாழ்க்கையைப் படம்பிடிப்பதும் இலக்கியந்தான், அதனைப் பண்படுத்துவதும் இலக்கியந்தான். அத்தகைய இலக்கியத்தால் பக்தியைப் பரப்புவதுடன் தமிழின்பால் மாறாத காதலும் கொள்ள செய்ய முடியும் என காட்டியவர்கள் ஆழ்வார்கள். அவர்களின் திவ்ய பிரபந்த பாடல்களில் இடம்

பெற்றுள்ள இலக்கிய நயம் மீண்டும் மீண்டும் படித்து இரசிக்கதக்கது. அனைத்து பாடல்களுமே நயம் மிக்கவைதான். இருந்தாலும் இந்த கட்டுரையில் அவற்றில் சிலவற்றை மட்டுமே பார்க்கப் போகிறோம். எந்த விருந்தும் அளவோடு இருந்தால்தானே சுவையாக இருக்கும்?

## நம்மாழ்வார் காட்டும் நயம்

சூரியன் மறையும் மாலைப் பொழுது வந்தது. பிறை சந்திரன் தோன்றியது என்ற சாதாரண விஷயத்தையும் நயத்தோடு விவரிக்கிறார் நம்மாழ்வார். அவர் கூறுகிறார். 'பால் மணம் மாறாத பிறை சந்திரனாகிய இளங் குழந்தையை தன் இடுப்பில் எடுத்துக் கொண்டு, சூரியனாகிற கணவனை இழந்த சோகத்தில் மேல்திசை ஆகிய பெண் வருந்தி அழும் மாலை பொழுது வந்தது-'பால் வாய்ப் பிறைப் பிள்ளை ஒக்கலைக் கொண்டு பகல் இழந்த மேல்பால் திசைப்பெண் புலம்புறு மாலை' (2512)'

இதே கருத்தை இன்னொரு இடத்திலும் 'திங்கள் அம்பிள்ளை புலம்ப தன் செங்கோல் அரசு பட்ட செங்களம் பற்றி நின்று எள்கு புன்மாலை' (2554) அதாவது, அதுவரை ஒளி அரசு செய்த செங்கோல் சூரியன் மறைந்து போனதை இறந்ததாக நினைத்து விட்ட அவன் பிள்ளை சந்திரன் அழ, அந்த சூரியனின் மனைவியாகிய மாலை நேரப்பெண், செவ்வான போர்க்களத்தில் வருந்துகிறாள் என மிக அழகாக கூறுகிறார்.

இதே காட்சியை வேறு விதமாகவும் வர்ணிக்கிறார். சூரியன் என்னும் யானை அஸ்தமனம் என்ற மலையில் போய் மறைந்தது. அந்த ஒரு யானை மறைந்த சிறிது நேரத்தில் கரிய நிறம் கொண்ட பல யானைகளின் கூட்டமாக கரு நீல

இரவு வந்து எங்கும் பரந்து விரிந்தது என்கிறார் - 'கோலப் பகல் களிறு ஒன்று கல் புய்ய, குழாம் விரிந்த நீலக் கங்குல் களிறு எல்லாம் நிரைந்தன - (2517).'

இத்துடன் நிறுத்தவில்லை நம்மாழ்வார். தன் கவித்திறனை, இதே காட்சியை வேறு வேறு விதமாகவும் வர்ணிப்பதன் மூலம் வெளிப்படுத்துகிறார், நிலை நிறுத்துகிறார். அதாவது 'கார் ஏற்று. இருள் செகில் ஏற்றின் சுடருக்கு உளைந்து வெல்வான் (2546) கறுத்த இருளாகிய எருது சிவந்த சூரியனாகிய எருதை தாக்கி வெல்லும் பொருட்டு போர் செய்ய வந்தது' என கூறுகிறார். அந்தி நேரத்தில் சிவந்திருக்கும் வானம் இரத்தம் சிந்தியுள்ள போர்க்களம் போல தோன்றுவதால் ஆழ்வாருக்கு இந்த கற்பனை தோன்றியிருக்கலாம்.

இன்னொரு பாசுரத்தில் 'கருங் குரங்கு ஒன்றின் கையில் ஒரு மாணிக்கம் அகப்படுகிறது. அதன் மதிப்பு அறியாத அந்த குரங்கு அதை வீசி எறிந்து விட அது போய் கீழே வீழ்கிறது. அதைப்போல ஆணிப் பொன் போன்ற ஒளியுடைய சூரியன் இருளின் மீது சாடி மறைந்தான் (2562)' என்கிறார்.

வேறொரு பாசுரத்தில் 'காலையில் இருள் என்னும் சிற்றரசர்கள் சூரிய பேரரசன் முன் நிற்க முடியாமல் ஓடி மறைகிறார்கள். ஆனால் அதே சிற்றரசர்கள் சூரியன் அஸ்தமனம் ஆனதும், மீண்டும் தைரியமாக உலகில் வந்து பரவுவார்கள் - காலை வெய்போற்கு முன் ஓட்டுக் கொடுத்த கங்குல் குறும்பர் மாலை வெய்யோன் பட வையகம் பாவுவர் (2570)' என அதே காட்சியை அழகாக விவரிக்கிறார்.

நிலவொளியோடு கூடிய மாலைப்பொழுது நம்மாழ்வாருக்கு வேறுவித கற்பனையை தோற்றுவிக்கிறது. வானில் உலாவும் வெண்மையான சந்திரனை ஒரு பசுவாக நினைக்கும் ஆழ்வாருக்கு அதன் நிலவொளி, அந்த பசு சுரந்து

கொட்டும் பாலாக தோன்றுகிறது. (வால் வெண்நிலவு உலகு ஆரச் சுரக்கும் வெண் திங்கள் என்னும் பால் விண் சுரவி சுர முதிர் மாலை - 2550.)

இவ்வாறெல்லாம் சூரியன் மறையும் காட்சியை வர்ணிப்பதற்காக வானத்தைப் பார்த்துக் கொண்டிருந்த நம்மாழ்வார் பார்வையில் மேகங்கள் தென்படுகின்றன. சிறந்த பக்தரான அவருக்கு அவை திருமாலை நினைவு படுத்துகின்றன.

சாதாரணமாக பெருமான் மேகநிறமுடையவன் என்பது எல்லோரும் கூறுவதுதான். அதையே ஆழ்வாரும் கூறினால் அவருடைய அறிவாற்றலுக்கு அது பொருந்துமா? எனவே இலக்கிய நயத்தோடு சற்று மாற்றி கூறுகிறார் நம்மாழ்வார். பெருமானின் திருமேனி நிறத்தைப் பெற வேண்டும் என்பதற்காக மேகங்கள் முயன்று தவம் செய்தனவோ என யோசிக்கும் அவர், அவை அகன்றவானில் எங்குபோய் எவ்வகை தவங்களைச் செய்திருக்கும் எனவும் வியக்கிறார். (2669)

இதே கருத்தை 'மேகங்களோ, உரையீர் திருமால் திருமேனி ஒக்கும் யோகங்கள் உங்களுக்கு எவ்வாறு பெற்றீர்? உயிர் அளிப்பான். மாகங்கள் எல்லாம் திரிந்து நல் நீர்கள் சுமந்து நும்தம் ஆகங்கள் நோவ வருத்தும் தவம் ஆம் அருள் பெற்றதே (2509)' என்ற பாசுரத்திலும் எடுத்துரைக்கிறார்.

ஆழ்வார் நோக்கில் இரவைப் பார்த்த நாம், அவர் காட்டும் தலைவி ஒருத்தி இரவைப் பற்றி விவரிக்கும் நயத்தைப் பார்ப்போம். தலைவனைப் பிரிந்திருக்கும் பொழுது இரவு ஊழிக்காலம் போல் நீள்வதால் அதன் பாதிப்பால் தலைவி மெலிகிறாள் அப்படியானால் தலைவன் வந்ததும் அவள் உடல்நிலை சரியாக வேண்டும் அல்லவா? அதுதான் இல்லை. அவர் கூட இருக்கும் பொழுது, நாழிகையைக் கூறிட்ட நொடிபோல வேகமாக இரவு செல்கிறதே என்ற வருத்தத்திலும்

தலைவி மெலிகிறாள் (2493) என ஆழ்வார் நயத்தோடு கூறுகிறார்.

நம்மாழ்வார் காட்டும் வேறொரு நாயகியும் நயத்தோடு பேசுபவளாகவே அமைந்துள்ளாள். அவள் சிறிய நாகணவாய் பறவையைத் தலைவனிடம் தூது செல்லும்படி வேண்டியும் அது செல்லவில்லை. எனவே அவள் சொல்கிறாள் 'இனி, உனது வாய் அலகில் இன் அடிசில் வைப்பாரை நாடாயே, (2939) அதாவது உன் வாயலகில் உணவை ஊட்ட வல்லவர்களைத் தேடிக் கொள்.' இதற்கு இரண்டு விதமாக பொருள் கொள்ளலாம். நீ தூது செல்லாததால் நான் தலைவனைச் சேர முடியவில்லை. எனவே நான் உயிர் தரியேன். இனி உனக்கு உணவு ஊட்ட வேறு யாரையாவது பார் என ஒரு பொருள், மற்ற பொருள் - எனக்கு உதவாத உனக்கு உணவு ஊட்ட நான் விரும்பவில்லை, எனவே அதற்கு வேறு ஆளைப் பார். ஒரே வரியில் எத்தனை நயம்.

அடுத்ததாக அவர் இலக்கிய நயத்தோடு விவரிக்கும் வேறொரு பாசுரத்தைப் பார்ப்போம். அந்த பாசுரத்தில் ஒரு பெண்ணுக்கு மட்டும் சிறப்பு கிடைக்கும் பொழுது அந்த சிறப்பு கிடைக்காத அவளை ஒத்த வேறொரு பெண் என்ன செய்வாள் என நடைமுறை வழக்கத்தை வைத்து காட்டுகிறார். குளிர்ந்த கண்களையுடைய மலர்மகளான திருமகளை பாற்கடல் அழைத்து, வெண்மையான அலைக்கரங்களால் எடுத்து, அரவணையில் ஏற வைத்தது. ஆனால் அந்த மாதிரி எந்த சிறப்பும் திருமகளுக்கு இணையான பூமி பிராட்டிக்கு செய்யப்படவில்லை. அதனால் மனம் பொறுக்காத பூமாதேவி வான்மேகங்களின் இடி முழக்கம் மூலமாக முதலில் அழுகுரல் எழுப்பினாள். பின் மழை நீரான கண்ணீரைப் பெருக விடுகிறாள் என ஒரு சொற்சித்திரத்தை வரைகிறார்.

நம்மாழ்வார் ஓர் அடியார் போல பேசும் பொழுதும் நயம்பட நவில்கிறார். பொதுவாக இறைவனை வேண்டும் பொழுது என்னை கண் பாராய் என கேட்போம். அதையும் அழகாக கேட்கிறார் ஆழ்வார். செம் மா கமலம் செழு நீர்மிசைக் கண் மலரும் திருக்குடந்தை அம்மா மலர்க்கண் வளர்கின்றானே! (3419) திருக்குடந்தை நகரில் நீரில் உள்ள செந்தாமரை மலர்கள் யாவும் மலர்கின்றன. ஆனால் அங்கு பள்ளி கொண்டுள்ள உன் தாமரை கண்கள் மட்டும் மலராமல் மூடியே உள்ளனவே! என சுவையாக கூறுகிறார்.

பக்தர்களின் இதயத்தில் பகவான் இருக்கிறார் என்ற கருத்து எல்லோராலும் சொல்லப்படுவதே. அதே கருத்தை நம்மாழ்வாரும் கூறுகிறார். மிகவும் சிறியவனான என் சிந்தையில் அவன் நின்று நிலைத்து அருள் செய்கிறான் என கூறியதும், சிறிய சிந்தைக்குள் நிற்கும் அளவிற்கு இறைவனும் மிக சிறியவனோ என யாராவது நினைத்து விட போகிறார்களே என்ற பயமும் வந்திருக்க வேண்டும். உடனே மிகுந்த நயத்தோடு அதே பாசுரத்தில் அடுத்த வரியாக மூவுலகங்களையும் வயிற்றில் அடக்கிக் காப்பாற்றியவன் என கூறி, அவன் எவ்வளவு பெரியவன் என்பதையும் உணர்த்தி விடுகிறார். இதோ அந்த பாசுரம்.

சிறியேனுடைச் சிந்தையுள் மூவுலகும் தன்
நெறியா வயிற்றில் கொண்டு நின்றொழிந்தாரே (3744)

திருமால் நீருண்ட மேகம் போல, நீலநிற மாணிக்கமலை போல கரிய நிறம் உடையவன். ஆனாலும் மிகுந்த ஒளி மிக்கவன். இந்த இரண்டு மாறுபட்ட குணங்களையும் ஒரே வார்த்தையால் விளங்க வைக்க முடியுமா? தன்னால் முடியுமென நம்பிக்கையோடு காட்டுகிறார் நம்மாழ்வார். அவர் தந்த அந்த ஒரு வார்த்தை 'கருஞாயிறு'! எவ்வளவு பொருத்தமானது!

செந்தண் கமலக் கண் கை கால்
சிவந்த வாய் ஓர் கரு நாயிறு
அந்தம் இல்லாக் கதிர் பரப்பி
அலர்ந்தது ஒக்கும் அம்மானே! (3721)

இதே வார்த்தையை வேறொன்றை விவரிக்கவும் நயமாக பயன்படுத்துகிறார். எப்படி?

'கரு நாயிறு உதிக்கும் கரு மா மாணிக்க, நாள் நல்மலைபோல் சுடர்ச்சோதி முடி சேர் சென்னி அம்மானே!' (3716)

அதாவது நீல நிற மாணிக்க மலையிலே கருத்த சூரியன் உதித்து வருவது போல பெருமானின் ஒளிவீசும் மயிர் கற்றைத் திருமுடி விளங்குகிறது என கூறி கருமையும் ஒளி வீசும் தன்மையும் கொண்ட மயிர் கற்றையையும் கரு ஞாயிறு என விவரிக்கிறார்.

வளமான நாட்டில் மரங்கள் சாதாரண உயரத்தை விட சற்று அதிகமாகவே உயர்ந்து காணப்படுவது வழக்கந்தான். திருப்புலியூரில் வாழை மரங்கள் உயர்ந்து வளர்ந்துள்ளன என கூற வந்த நம்மாழ்வார் அதையும் நயத்தோடு கூறுகிறார். மடலும் இலையும் தழைத்த வாழைகள் வெற்றிலை கொடிகளுக்கும் கமுகு மரங்களுக்கும் நிழல் கொடுக்கின்றன என்றும் தென்னை மர இலைகளோ வாழை மரங்களைத், தழுவுகின்றன (3765) என்றும் கூறுவதன் மூலம் கமுகு மரங்களை விட உயரமாக இருப்பதால் நிழல் தர முடிகிறது. தென்னை மர உயரத்திற்கு வளர்ந்திருப்பதால் இலைகள் தழுவுகின்றன என அழகாக விளங்க வைக்கிறார்.

## மற்ற ஆழ்வார்கள் காட்டும் நயம்

நம்மாழ்வாரைப்போலவே மற்றவர்களும் நயம் மிகுந்த பாசுரங்களை நமக்கு நல்கியுள்ளனர். அவற்றுள் சிலவற்றை இப்பொழுது பார்க்கலாம்.

பெரியாழ்வார் தவவலிமையை வலியுறுத்த மிக அழகான காட்சி ஒன்றை சித்தரிக்கிறார். கொல்லும் வாயுடைய சினம் கொண்ட புலிகள், இலைகளால் வேயப்பட்ட குடிசைகளுள் நுழைந்ததும் அங்குள்ள தவமுனிவரைக் காண்கின்றன. அவருடைய சீர்மையால் தம் குணம் மாறி அவரருகே சென்று நிற்க, அவர் தம் கழுத்தைச் சொறிய நின்றபடியே உறங்குகின்றனவாம் 'இலைவேய் குரம்பைத் தவ மா முனிவர் இருந்தார் நடுவே சென்று அணார் சொறியக் கொலை வாய்ச் சின வேங்கைகள் நின்று உறங்கும் (271)'

புலிகளைக் காட்டியவர் அடுத்ததாக காட்டும் காட்சியும் நயம் மிக்கதே. களித்துத் திரிந்த காட்டானை ஒன்றின் கொம்பு முறிபட்டு விடுகிறது. தன் வழி செல்லும் அது அண்ணாந்து பார்க்க, வானில் வளைந்த மூன்றாம்பிறை தென்படுகிறது. அதை தன் தந்தம் என தவறாக எண்ணி மதநீர் துதிக்கையைத் தூக்கி அதை எடுக்க முயல்கிறதாம். 'கானக்களியானை தன் கொம்பு இழந்து கதுவாய் மதம் சோரத்தன் கை எடுத்துக் கூனற்பிறை வேண்டி அண்ணாந்து நிற்கும்.'(268)

அடுத்து மனிதர்கள் இடம்பெற்ற அழகான காட்சியைக் காண்போமா? தினைப் புனம் காத்துக் கொண்டிருக்கும் குறவர்களின் முன்னே அவர்களைக் காப்பாளார்களாக கொண்ட குறத்திகள் வருகிறார்கள். அவர்களின் மருண்ட பார்வை மானின் பார்வையை ஒத்திருப்பதால், அவர்களை புனம் மேய வந்த மான் கூட்டம் என நினைத்த குறவர்கள் அவர்களை விரட்ட தம் வில்லை வளைக்கிறார்களாம். (266) இவ்வாறு சொல்லோவியங்களை நயமாக நமக்களித்துள்ளார் பெரியாழ்வார்.

பெரியாழ்வாரை அடுத்து பேயாழ்வார் வருகிறார். நாம் பலவிதமான விளக்குகளைப் பார்த்திருக்கிறோம். ஆனால் இவர் காட்டும் மங்கல விளக்கு புதுமையானது. திருவல்லிக்கேணியின்

கடற்கரையில் வெண்மையான அலைகள் மோதி தள்ளிய செம்பவளங்களும் வெண் முத்துக்களும் மாலை வெயில்பட்டு மங்கல விளக்குகளாக ஒளி வீசுகின்றனவாம்.

வந்து உதைத்த வெண் திரைகள் செம்பவள வெண்முத்தம்
அந்தி விளக்கும் அணி விளக்காம் - (2297)

பொதுவாக காலையில் சூரியனைக் கண்டதும் மலரும் தாமரை மாலையில் சந்திரனைக் கண்டு தன் இதழ்களை மூடிக்கொள்ளும். ஆனால் பேயாழ்வார் கண்ட ஒரு தாமரை ஒரே நேரத்தில் மலர்ந்து மூடுகிறது. அது எப்படி? அப்படிப்பட்ட தாமரை எங்கே இருக்கிறது? அதுதான் திருமாலின் திருநாபியில் ஓங்கி வளர்ந்திருக்கும் தாமரைப்பூ. அது பெருமானின் வலக்கரத்தில் உள்ள சக்கரத்தைப் பார்க்கிறது. ஒளி பொருந்திய அதைப் பார்த்ததும் ஓஹோ, சூரியன் தோன்றிவிட்டான் என எண்ணி மலர ஆரம்பிக்கிறது. அதே நேரம் திருமாலின் இடக்கரத்தில் காட்சி தரும் வெண்மையான சங்கைப் பார்த்ததும், அடடா, வெண்மையான குளிர்ந்த நிலவு உதித்து விட்டதே என்ற எண்ணத்தில் இதழ்களை மூடிக் கொள்கிறதாம்

ஆங்கு மலரும் குவியுமால் - உந்திவாய்
ஓங்கு கமலத்தின் ஒண்போது - ஆம் கைத்
திகிரி சுடர் என்றும் வெண் சங்கம் வானில்
பகரு மதி என்றும் பார்த்து! (2348)

அடுத்து பூதத்தாழ்வாரின் பாசுரம் ஒன்றில் காணப்படும் நயத்தை இரசிக்கலாம். ஆழ்வார் ஓர் உயர்ந்த ஒப்பில்லாத தாமரை பூவைத் திருமாலின் திருவடியில் சமர்பிக்கிறார். அது எது தெரியுமா? நட்பைக் குறிக்கும் முத்தே புற இதழாய் கூடுவதை காட்டும் மாணிக்கமே அக இதழாய் விருப்பம் என்னும் வயிரமே தாதுவாக உள்ள ஒப்பற்ற பக்தி என்கிற தாமரைப் பூதான் அது! (2185)

அடுத்து அவர் சமர்பிக்கும் விளக்கும் வித்தியாசமானது. அன்பாகிய பக்தியே அகலாகவும் ஆர்வமாகிய பரபக்தியே நெய்யாகவும் உருகும் இனிய மனமே திரியாகவும் கொண்டு ஞான வடிவமான ஆத்மா கரையப்பெற்று ஞானமாகிய சுடர் விடும் விளக்கை நாராயணனுக்கு ஏற்றுகிறார். (2182)

இதேபோல் பொய்கை ஆழ்வாரும் இலக்கிய நயத்தோடு இன்னொரு விளக்கைக் காட்டுகிறார். அவருக்கு பூமியே அகலாகவும் கடலே நெய்யாகவும் வெப்பக் கதிர்களுடைய சூரியனே சுடராகவும் தோன்ற அதை திருமால் திருவடிகளிலே சமர்பிக்கிறார். (2082)

**திருமங்கை ஆழ்வார்:**

கடைசியாக திருமங்கை ஆழ்வார் காட்டும் இலக்கிய நயத்தை அனுபவிப்போம். மூங்கில்கள் என்றாலே உயரமாக வளர்பவை. சாதாரணமாக சொல்லும்போது வானளவு உயர்ந்த மரங்கள் என்பது வழக்கம். ஆனால் இவர் சற்று வித்தியாசமாக ஆனால் அதே நேரத்தில் அழகாக அதை வர்ணிக்கிறார். திருமாலிருஞ் சோலையில் பின்னி வளர்ந்த மூங்கில்களின் நுனிகள் மலை உச்சியில் உள்ள தேன் கூட்டைக் கிழிப்பதால், தேனீக்கள் கலைந்து தேன் வெள்ளம் ஓடி மணம் கமழுவதாக கூறி, மூங்கில்கள் மலையுச்சி உயரத்திற்கு வளர்ந்துள்ளதை உணர்த்துகிறார். 'பிணங்கலில் நெடுவேய் நுதி முகம் கிழிப்ப, பிரசம் வந்து இழிதர, பெருந்தேன் மணங் கமழ் சாரல் மாலிருஞ்சோலை' (1822)

அசோக மலர்கள் செந்நிறத்தோடு மலர்ந்தன என நாம் சாதாரணமாக சொல்வதையே அவர் அழகாக நயத்தோடு எவ்வாறு கூறுகிறார் தெரியுமா? 'தாது மல்கிய பிண்டி விண்டு அலர்கின்ற தழல்புரை எழில் நோக்கி, பேதை வண்டுகள் எரி

என வெருவரு பிரிதி' (966) அதாவது மகரந்தத்துடன் நெருப்பு போல மலரும் அசோக மலர்களை தீயென்று எண்ணி வண்டுகள் பயப்படுகின்றன என ஒரு சித்திரத்தைத் தீட்டிக் காட்டுகிறார்.

அதேபோல் அந்த ஊரில் வேதங்கள் அதிகமாக ஒலிக்கின்றன என்ற கருத்தையும் நயம்பட கூறும்போது அங்கே ஓதப்படும் வேதத்தைக் கேட்கும் சிறுமியரும் (வேதம் திரும்ப திரும்ப ஓதப்படுவதால்) அதை நன்கு பயின்று திரும்ப கூறுகிறார்கள். அதை கேட்டவாறு இருந்த சிவந்த வாயுடைய கிளிகளும் நான்கு வேதங்களையும் பாடுகின்றன என்கிறார்.

அவ்வாய் இள மங்கையர் பேசவும் தான்
அரு மா மறை அந்தணர் சிந்தை புக
செவ்வாய்க் கிளி நான்மறை பாடு தில்லை (1163)

இதே கருத்தை

முளை வாள் எயிற்று மடவார் பயிற்று
மொழி கேட்டிருந்து முதிராத இன்சொல்
வளை வாய கிள்ளை மறைபாடும் நாங்கூர் (1225)

என்ற பாசுரமும் பயில்கிறது.

சந்திரன் தோன்றும் இரவில் பனிபொழிவது சாதாரண நிகழ்ச்சி. ஆனால் அதற்கும் திருமங்கை ஆழ்வார் வித்தியாசமான காரணம் கூறுகிறார். அதாவது மலைபோல் உயர்ந்த மாளிகை மேல் மாதர்கள் கூடுகிறார்கள். அவர்களின் முகத்தாமரை ஒளிக்கு முன்னால் நிலவின் ஒளி எடுபடவில்லை. தோற்றுப்போன சந்திரன் மிகவும் வருந்தி சொரியும் கண்ணீர்தான் அந்த பனி என்கிறார் ஆழ்வார். (1183) இந்த காரணம் இரசிக்கத்தக்கதாக இருக்கிறதல்லவா?

அடுத்ததாக ஆழ்வார் ஓர் அழகான நடன காட்சியைக் காட்டுகிறார். மேகங்களின் இடி முழக்கத்தை மிருதங்க ஒலியாகவும் வண்டுகளின் ரீங்காரத்தை வாய்ப்பாட்டாகவும் கொண்டு அமைந்த அந்த நடன நிகழ்ச்சியில் ஆடும் நடன மணிகள் யார் தெரியுமா? சோலையிலுள்ள மயில் கூட்டங்கள்தான்! 'கொண்டல் ஆர் முழவின் குளிர் வார் பொழில் குலமயில் நடம் ஆட, வண்டுதான் இசை பாடிடும்.' (1260)

இதே கருத்தை கான் உலா மயிலின் கணங்கள் நின்று ஆடக் கண முகில் முரசம் நின்று அதிர, தேன் உலாம் வரிவண்டு இன் இசை முரலும் (1754) என்ற பாசுரத்திலும் வலியுறுத்துகிறார்.

இன்னொரு சுவையான காட்சி! மாந்தோட்டத்தில் உள்ள மடக்குயில்கள் மாந்தளிர்களைத் தம் வாயால் கொத்துகின்றன. அந்த தளிர்களில் உள்ள துவர்ப்பு சுவையை உணர்ந்ததும் அதை விரும்பாமல், மாற்ற எண்ணி பலாப்பழத்தைத் தேடி சென்று அதிலுள்ள தேனைப்பருகுகின்றன என்கிறார் ஆழ்வார். (1371) அதேபோல் நாரைகள் தன் பேடைகளுடன் கொழுத்த மீன்களை உண்ட பிறகு தாமரைப் பூவில் உள்ள தேனை அருந்துவதும் (1495) அனுபவிக்க வேண்டிய காட்சிதான்!

## முடிவுரை

இலக்கு என்றால் குறிக்கோள் மக்கள் எப்படி தங்கள் குறிக்கோளை அடைய வேண்டும் என்பதை இயம்புவதே இலக்கியம். வாழ்க்கையை மொழி வாயிலாக வெளிப்படுத்துவதே இலக்கியம் என்றார் அறிஞர் அட்சன். வாழ்க்கை என்ற மேகத்திலிருந்து தோன்றுவதே இலக்கியம் என்ற மழை என்பார் வேறொர் அறிஞர்.

ஆனால் நம்மைப் போன்ற சாதாரண மனிதர்களுக்கு இலக்கியம் என்பது இரசிக்கதக்க ஒன்று, படிக்க படிக்க இன்பம் தரும் ஒன்று! அத்தகைய இரசனையை, இன்பத்தை ஆழ்வார்களின் பாடல்களில் அமோகமாக அனுபவிக்கலாம். திவ்ய பிரபந்த பாடல்களில் காணப்படும் இலக்கியநயம் எளிமையானதாக, எல்லோராலும் புரிந்து கொள்ளக் கூடியதாக, வாழ்க்கையில் நாம் காணும் காட்சிகளைப் பிரதிபலிப்பதாக அமைந்துள்ளதை இதுவரை கண்டோம், இனிதே இரசித்தோம்.



# 4. திருமங்கையாழ்வார் காட்டும் விலங்கியல் வாழ்வின் விதவித காட்சிகள்

முன்னுரை:

மயர்வற மதிநலம் அருளப்பெற்ற ஆழ்வார்களில் திருமங்கையாழ்வார் பல்வேறு சிறப்புகளும் மேன்மைகளும் உடையவர், வேத சாரத்தை தம் ஆறு பிரபந்தங்களில் அருளியவர். அவை பெரிய திருமொழி, திருக்குறுந்தாண்டகம், திரு நெடுந்தாண்டகம், திருவெழு கூற்றிருக்கை, சிறிய மடல், பெரிய திருமடல் என்பன ஆகும்.

இவரது பாசுரங்களில் எம்பெருமானின் கல்யாண குணங்கள் விவரிக்கப்பட்டுள்ளன. திருமாலே பரம்பொருள், அவனுக்கு உடைமையான ஆத்மாக்கள் அவனுக்கு சிறப்பு செய்யவும் அடிமைப்படவும் உரியன என்ற செய்தி நன்கு விளக்கப்பட்டுள்ளது. ஞானநிலையில் ஆழ்வார் அருளும் மெய்ப்பொருள் உணர்வுகளும், பரகால நாயகியாய் உருகும் பகவத் பிரேமையும் நம் ஞான கண்ணை திறக்கின்றன.

இருந்தாலும் நம்மைபோல சாமான்யர்களுக்கு அவரது உயர்ந்த தத்துவங்களை விட பாசுரங்களில் காணப்படும் இயற்கை வருணனை, விலங்கியல் வாழ்க்கையில் காணப்படும் விதவிதமான காட்சிகள் போன்றவை அதிகமாகவே கவனத்தை ஈர்க்கின்றன. அப்படிப்பட்ட சில காட்சி வருணனைகளை இப்போது காணலாம்.

வண்டினம்

முதலாவதாக வண்டுகளின் செயல்பாட்டைச் சுவையாக எப்படி கூறுகிறார் என பார்ப்போம். 'தாது மல்கிய பிண்டி விண்டு அலர்கின்ற தழல்புரை எழில் நோக்கி பேதை வண்டுகள் எரி என வெருவரு பிரிதி' (1966) அதாவது மகரந்தத்துடன் நெருப்பு போல மலரும் அசோக மலர்களை தீ என்று எண்ணி வண்டுகள் பயப்படுகின்றனவாம்.

அத்தோடு, தாமரை பூவில் தேனை அருந்தி இசைபாடும் வண்டுகள், மேலும் மது அருந்த எண்ணி அங்குள்ள செருந்தி மரப்பூக்களில் திரண்டு சேரும் என்ற கருத்தை 'கமல நல் மலர்த்தேறல் அருந்தி இன்இசை முரன்று எழும் அளிகுலம் பொதுளி அம் பொழிலூடே செருந்தி நாள்மலர் சென்று அணைந்து' (1148) என்ற பாசுரபகுதி கூறுகிறது.

மேலும் மலை பகுதிகளில் நெருங்கிய குருக்கத்திப் பந்தலில் ஆண் வண்டுகள் தங்கள் பெடைகளின் வரவை நோக்கி தென்ன தெனா என்று இனிய இசைபாடுகின்றன (1149) என்றும் மயில்கள் ஆடுவதால் சோலை அசைய அதனால் கலைந்து புறப்பட்ட வண்டுகள் நீரோடும் வாய்க்கால் அருகேயுள்ள வயல்களில் சென்று வானில் பறப்பதால் மாடத்தின் மீதுள்ள கொடிகள் அசைந்தாடும் (1158) என்றும் வர்ணிக்கும் போது அந்த காட்சிகள் நம் கண்முன் தெரிகின்றன.

அது மட்டுமா, வண்டுகள் செங்கழு நீர் பூவில் அமர்ந்து. பின் தாமரையில் படுத்து தாழம்பூவின் பொடிகளில் புரண்டு இசைபாடுவதை 'கழுநீர் கூடித் துறை தங்கு கமலத்துத் துயின்று கைதைத் தோடு ஆரும் பொதி சோற்றுச் சுண்ணம் நண்ணி சிறை வண்டு களி பாடும்' (1186) என அழகாக படம் பிடித்து காட்டுகிறார்.

அடுத்ததாக மணம் வீசும் செண்பகம், மல்லிகை பூக்களைத் தழுவி மது அருந்திய வண்டுகள் தம் வெம்மையை போக்க இளந்தெங்கில் புகுந்து அளைகின்றனவாம். (1195)

மேலும் பூவில் வாழும் ஆண்வண்டு தன் பெடையுடன் வாடியதால், பெண்களின் கூந்தலில் மறைய எண்ணி, சந்திரனை தொடும் அளவு உயர்ந்த மாடங்களைச் சேரும். (தங்கு பேடையோடு ஊடிய மதுகரம் தையலார் குழல் அணைவான் திங்கள் தோய் சென்னி மாடம் சென்று அணை -1373)

மேலும் 'கொம்பில் ஆர்ந்த மாதவிமேல் கோதி மேய்ந்த வண்டு இனங்கள் அம்ப அராவும் கண் மடவார் ஐம்பால் அணையும்' (1590) எனவும் 'கதம் மிகு சினத்த கட தடக்களிற்றின் கவுள் வழிக் களி வண்டு பருக' (1825) அதாவது மலையில் உலவும் சினம் மிகுந்த யானைகளின் கன்னங்கள் வழியே மதநீர் பெருகி ஓட வண்டுகள் அதை பருகும் எனவும் வண்டுகளின் செயல்பாட்டை வர்ணிக்கிறார்,

**அன்னங்கள்**

நாம் அடுத்து அன்னப்பறவைகளின் அழகிய வாழ்க்கையை காண்கிறோம். மணிமலை நிழலில் அன்னங்கள் தம் பெடைகளுடன் தாமரை பூ படுக்கையில் இனிதே தங்குவதையும் (அன்னம் மாமலர் அரவிந்தத்து அமளியில் பெடையொடும் இனிது அமர-1154) பெண்கள் நடப்பதை பார்த்து அன்னங்கள் தம் பேடைகளுடன் உலாவி தோற்றதால், வெட்கம் அடைந்து ஒளிந்து கொள்ளுவதையும் (பெடையோடு அன்னம் பெய்வளையார் தம் பின் சென்று நடையோடு இயலி நாணி ஒளிக்கும் - 1492) எழிலோடு எடுத்துரைக்கிறார்.

அடுத்து ஓர் அழகான காட்சி! ஆண் அன்னம் தன் பெடையின் ஊடலுக்கு அடங்கி, அதனைப் பிரியாமல் தான் தங்கிய தாமரையில் மது அருந்தி, அந்த பேடையையும் பருக செய்கிறதாம். (பெடை அடர்த்த மட அன்னம் பிரியாது மலர்க்கமலம் மடல் எடுத்து மது நுகரும் - 1528) தாமரையில் அன்னம் அமரும் வேளையில் நீரில் படர்ந்த இலைகள் குடைபோல் நிழல் தர, செந்நெற் கதிர்கள் சாமரம் வீசுகிறதாம், (அன்னம் மென் கமலத்து அணி மலர்ப் பீடத்து, அலைபுனல் இலைக் குடை நீழல், செந்நெல் ஓண் கவரி அசைய வீற்றிருக்கும் - 1752)

### மீன்கள்

நீர் பறவையான அன்னத்தை கவனித்த நாம் அடுத்ததாக நீர் வாழ் உயிரினமாக மீன்களைப் பார்ப்போமா?

பாளைகள் வளர்ந்த பாக்க மரங்களின் நடுவே உள்ள தென்னைகளிலிருந்து தேங்காய்கள் குளத்தில் விழுகின்றன. அதைக் கண்டு பயந்த வாளை மீன்கள் குதித்தோடுவதை 'பாளை வான் கமுகு ஊடு உயர் தெங்கின்வண் பழம் விழ வெருவிப் போய் வாளை பாய் தடம் சூழ்தரு நாங்கூர்' (1265) என்பதன் மூலம் படம் பிடித்து காட்டுகிறார்.

தென்னை விழ பயந்த வாளை மீன்கள் சிறிய கயல் மீன்களை பயமுறுத்துகின்றன எப்படி தெரியுமா? தாமரை பூவிலிருந்து விழுந்த தேனைப் பருகிய பெரிய வாளை மீன்கள் துள்ளுகின்றன. அதனைக் கண்ட சிறிய கயல் மீன்கள் பயந்தோடுகின்றனவாம். 'பங்கயம் உகுத்த தேறல் பருகிய வாளை பாய, செங்கயல் உகளும்' (1295)

அது மட்டுமா, தாழம்பூ மலர்வதை பார்த்த கெண்டை மீன்கள் குருகு பறவை என்று எண்ணி, அது தன்னை பிடிக்குமோ எனவும் பயப்படுகின்றன - (1366)

ஆனால் வேறொரு சந்தர்ப்பத்தில் நீரில் துள்ளும் பெரிய மீன்களுக்கு பயப்படும் குருகுகள், ஆரல் மீனைக் கவ்வியவாறு அருகே வரும் என கூறுவதும் சுவையாக இருக்கிறது - 'நீரில் பணைத்த நெடு வாளைக்கு அஞ்சி போன குருகு இனங்கள் ஆரல் கவுளோடு அருகு அணையும்' (1589)

அத்தோடு நீர் நிலத்தில் வாழை மரங்களிலிருந்து கனிந்த பழங்கள் விழுவதை சாப்பிட்ட கயல்மீன்கள் சேற்று நில வயல்களில் துள்ளி ஓடுகின்றனவாம் (ஊற்றிடை நின்ற வாழையின் கனிகள் ஊழத்து வீழ்ந்தன உண்டு மண்டி சேற்றிடை கயல்கள் உகள் திகழ் வயல் - 1343)

**குரங்குகள்**

எத்தனையோ உயிரினங்களைப் பற்றி எப்படியெப்படியோ காட்சிகள் காட்டப்பட்டிருந்தாலும் எல்லோரும் இரசிப்பது குரங்குகளைத்தான்! சாதாரணமாகவே அவைகளைப் பார்ப்பது சந்தோஷம் என்றால் அவைகளின் குறும்பு மேலும் மேலும் சந்தோஷத்தைத் தரவல்லது. நம்மைப் போலவே ஆழ்வாரும் அவைகளை ஆனந்தமாக எப்படி இரசிக்கிறார் என பார்ப்போம்.

பெண் குரங்குகள் வாழை மரத்தில் குந்தியவாறு பழங்களைத் தின்று விட்டு தம் குட்டிகளை அணைத்தபடி மாமரகிளைகள் மேல் உறங்கும் காட்சி 'குந்தி வாழையின் கொழுங்கனி நுகர்ந்து தன் குருளையைத் தழுவி போய் மந்தி மாம்பணை மேல் வைகு நாங்கூர் (1266) என்ற வரிகள் மூலம் கண் முன் வருகிறதல்லவா?

அது மட்டுமா, பெண் குரங்குகள் மாம்பழத்தைத் தின்ற பிறகு வாழை மரத்தில் ஏறி அங்குள்ள வண்டு சிதறி ஓடும்படி, வாழைப்பழங்களையும் தின்கின்றனவாம். (1291)

## யானை

அடுத்ததாக, அதோ ஆடி ஆடி அசைந்து வரும் யானையாரையும் சற்று பார்த்து விடுவோமா? வேங்கை பூ படுக்கையில் ஆண் யானை தன் துணையுடன் படுத்துறங்கும் வேளையில் தாலாட்டு போல வண்டுகள் ரீங்காரம் செய்து இசைபாடுகிறதை கவனித்தீர்களா?(960)

அத்தோடு மலைப்போன்ற ஆண் யானைகள் இள மூங்கில் முளைகளை பிடுங்கி தேனில் தோய்த்து சிறிய குட்டி யானைகளின் வாயில் பருக்கை தட்டாதபடி தேன் பாகுடன் ஊட்டுவதும் (962) ஓர் அழகிய குடும்ப காட்சியை சித்தரிக்கிறது.

## சிங்கங்கள்

இவற்றைத் தவிர, மலை போன்ற மிடுக்குடைய சினங்கொண்ட யானைகளும் அஞ்சும்படி வாள் போன்ற பற்களையுடைய சிங்கங்கள் குகைகளிலிருந்து புறப்படும் (959) காட்சியையும், அவை யானை கொம்புகளைப் பறித்து பகவான் திருவடிகளில் இட்டு வணங்குவதையும் (1008) சிவந்த கண்களையுடைய சிங்கங்கள் பெருமாள் திருவடிகளில் காணிக்கைகளை இட்டு வணங்குவதையும் (1017) கடல்நீரை முகந்து வானேறும் மேக ஒலியை கேட்டு யானை என்றெண்ணி சிங்கம் சீறுவதையும் (1823) ஆழ்வார் அற்புதமாக வர்ணிக்கிறார்.

## மற்ற உயிரினங்கள்

இதுவரை பார்த்த பறவைகள், விலங்குகள் தவிர வேறு சில உயிரினங்களின் உல்லாசமான வாழ்க்கையையும் அழகாக சித்தரிக்கிறார் திருமங்கை ஆழ்வார்.

பூக்கள் நிறைந்த புன்னை, ஞாழல் மரங்களின் நிழலில், தாமரைப்பூ மேல் பெரிய ஆண் நண்டுகள் உறங்குகின்றன (நிலவு மலர்ப் புன்னை, நாழல் நீழல் தண் தாமரை மலரின் மிசை மலி அலவன் கண் படுக்கும் - 1194) என கூறும் ஆழ்வார், கமுக மரங்களில் அணில்கள் தாவுவதால் காய்கள் உதிர்ந்து பலாமரத்தில் விழ, பலாப்பழங்கள் சிதைந்து தேனைப் பெருக்குவதையும் விவரிக்கிறார்.

அடுத்ததாக ஓர் அழகான காட்சி! திருக்குறுங்குடியில் கொக்குக் குஞ்சு, தான் ஏறத் தகுந்த மரக்கிளை மீதேறி தாயின் வாயில் உள்ள வெள்ளிறால் என்னும் மீனை உண்ணும் காட்சி (தக்க மரத்தின் தாழ் சினை ஏறி, தாய் வாயில் கொக்கின் பிள்ளை வெள் இறவு உண்ணும் குறுங்குடியே (1798) அழகானதுதானே? அதேபோல் மென்மையான சிவந்த கால்களுடைய ஆண் நாரைக்கு, குனிந்து பார்க்கும் பெண் நாரை செழித்த வயல்களில் மேய்ந்து உணவு தேடிக் கொடுக்கும் காட்சியும் இரசிக்கத்தக்கது! ஆக எந்த உயிரினமாக இருந்தாலும் பெண்ணினம் அன்பு மயமானது என்பதை விளக்குகிறார் ஆழ்வார்.

மேலும் புலிகள் மூங்கில் புதர்களில் ஒளிந்தபடி யானைகளின் அடிச்சுவடுகளை ஆராய்வதும் (1013) நெருங்கி கிடந்த கருத்த மேகக் கூட்டங்கள் முழங்கிய ஒலியைக் கேட்ட பெரிய மலை பாம்புகள், யானைகள் வருவதாய் எண்ணி மலை போல் அசைந்து செல்வதையும் (967) ஆழ்வார் விவரிக்கிறார். பன்றிகள் கொம்புகளால் பாறைகளைப் பிளக்கும் பொழுது மணிகள் வெளிப்பட்டு ஒளியுடன் மலையருவியில் உருண்டு விழுகின்றன (961) என்றும் மேலும் எருமைக் கன்றுகள் கணு உள்ள கரும்பு குருத்துக்களைத் தின்று, செங்கழு நீர்ப் பூத்தலத்தில் புரண்டு, பொய்கையில் முழுகி தம்

கொம்புகளில் மண்ணை ஏந்தியபடி கரை ஏறிக் கிடக்கும் என்றும் ஆழ்வார் விவரிப்பது சுவையானது!

மேகங்களின் இடிமுழக்கத்தை மிருதங்க ஒலியாகவும், வண்டுகளின் ரீங்காரத்தை வாய்ப்பாட்டாகவும் கொண்டு சோலையில் ஆடும் மயில் கூட்டங்கள் (1260) தேவர்களின் பூஜையில் முழங்கும் மத்தள ஓசையைக் கார்கால மேகம் முழங்கும் இடி என எண்ணி ஆடுவதையும் (1444) ஆழ்வாரின் பாசுரங்கள் அழகான ஓவியங்களாக வரைந்து காட்டியுள்ளன.

## முடிவுரை

பொதுவாக பக்தி நூல் என்றாலே உயர் தத்துவங்களும், உபதேசங்களும் மட்டுமே இருக்கும் என்று நினைப்பவர்கள் திருமங்கையாழ்வாரின் இந்த பாசுரங்களைப் பார்த்தால், சாதாரண மனிதர்களும் இரசிக்கும் விஷயங்களும் கூட பக்தி நூலின் பகுதியாக இருக்க முடியும் என புரிந்து கொள்வார்கள்.



# 5. திருமங்கை ஆழ்வார் சித்தரிக்கும் நாட்டுவளம்

## முன்னுரை

கேடறியாக் கெட்ட விடத்தும் வளங்குன்றா
நாடென்ப நாட்டின் தலை - குறள் 736

அதாவது பகைவரால் கெடுதல் இல்லாததாகவும், அவ்வாறு ஒரு கால் கெட்டாலும் தன் வளம் குறையாததாகவும் உள்ளதே சிறந்த நாடு என்கிறார் வள்ளுவர். அத்தகைய சிறந்த நாட்டில் நிறைந்திருக்கும் வளம் என்பது நீர்வளம், நிலவளம், ஊர்வளம், சோலை வளம், மக்கட் வளம், பொருள் வளம் போன்று பலவகைப்பட்டது.

திருமங்கை ஆழ்வாரும் தாம் சென்ற இடங்களிலெல்லாம் அப்படிப்பட்ட வளங்களைக் கண்டு ஆனந்தபட்டிருக்கிறார். யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம் என்பது போல தான் பெற்ற அனுபவத்தை நம்மோடும் பகிர்ந்து கொள்கிறார். நீர் இன்று அமையாது உலகு என்பதால் நீர் வளத்தையும், சுழன்றும் ஏர்ப்பின்னது உலகம் என்பதால் நிலவளத்தையும், நாடென்ப நாடா வளத்தன என்பதற்கேற்ப ஊர்வளத்தையும் மற்றும் சோலை வளத்தையும் செல்வ வளத்தையும் சிறப்புற விவரிக்கிறார்.

நீரிடை உறங்கும் சங்கம், நிழலிடை உறங்கும் மேதி, தாரிடை உறங்கும் வண்டு தாமரை உறங்கும் செய்யாள் என்றெல்லாம் விவரித்து கோசல நாட்டின் வளத்தை கம்பநாட்டாழ்வார் கண்முன் காட்டுவதைப் போல தாம் சென்ற ஊர்களின் பல்வகை வளங்களையும் பாங்காக சித்தரிக்கிறார் திருமங்கை ஆழ்வார்.

பக்தி இலக்கியம் என்றாலே பகவானின் பெருமையை மட்டுமே பறை சாற்றும் என்ற எண்ணத்தை மாற்றி, மக்கள் வாழ்க்கையையும் அவர்கள் வாழும் நாட்டின் வளத்தையும் எவ்வாறு திருமங்கை ஆழ்வார் வர்ணிக்கிறார் என இப்போது பார்ப்போம்.

## நீர்வளம்

ஒரு நாட்டின் வளத்தை எடுத்துக் காட்டுவது அந்த நாட்டில் ஓடும் ஆறுகள் தான். தமிழகத்தின் ஆறுகளில் தண்ணீர் ஓடுவதே தற்போது அதிசயமாக இருக்கலாம். ஆனால் ஆழ்வார்கள் காலத்தில் நாடு செல்வ செழிப்போடு இருந்ததால், ஆறுகளில் நீர் பெருக்கெடுத்து ஓடியது. நீர் மட்டுமல்ல, வெள்ளத்தின் வேகத்தில் வேறு சில பொருட்களும் இழுத்து வரப்பட்டன. அவற்றைப் பற்றி அறிய ஆவலாக இருக்கிறதல்லவா?

மலைகளுக்குச் சிறப்பு தரும் யானையின் கொம்புகளையும் அகில் மரங்களையும் தள்ளிக் கொண்டு வரும் ஆறுகள் ஓடி வயல்களில் பாய்கின்றன. (வரை வனம் திகழ் மதகரி மருப்பொடு, மலைவளர் அகில் உந்தித்திரை கொணர்ந்து அணை செழுநதி வயல் புகு - 1155)

அது மட்டுமல்ல, பிளிறுகின்ற யானையின் கொம்பையும் மணம் வீசும் மலை சந்தனத்தையும் இழுத்து வரும் வெள்ளாறு முத்துக்களைத் தள்ளி வயல்களில் புகுவதால் மீன் வளரும் நெய்தல் பூக்களும் மிகுந்துள்ளன. (1166) என்றும் அழகாக கூறுகிறார் ஆழ்வார்.

வெள்ளாற்றின் வேகத்தை விவரித்தவர், கலைகள் வளர்க்கும் காவிரியாற்றின் வளத்தையும் வர்ணிக்காமல் இருப்பாரா? 'ஒளி மணி சந்து அகில் கனகம் இழுத்து ஓடும் மண்ணி ஆறு (1252)' துளைக்கை யானை மருப்பும் அகிலும்

கொணர்ந்து 'உந்தி முன் திளைக்கும் செல்வப்புனல் காவிரி' (1381) 'வேயின் முத்தும் மணியும் கொணர்ந்து ஆர்புனல் காவிரி' (1386) என்றெல்லாம் வர்ணிக்கிறார்.

திருநறையூரில் காவிரி வயல் வரப்புகளில் பாய்ந்து மணிகளைச் சிந்த, அதில் புரண்டுவரும் அகில், சந்தன கட்டைகளை மக்கள் எடுத்துச் செல்கின்றனராம். (1499) அத்தோடு, தெருக்களில் கடல்கழிகளிலிருந்து நீருடன் ஓடி வந்த சங்குகள் எங்கும் கலந்து வழி அடைத்து, முத்துக்களை ஈன்று நிறைக்கும் காட்சியைக் கண்முன் காட்டுகிறார். (1529)

திருக்கண்ணங்குடியில் மலை மணிகளும் - மரகதமும், வயிரங்களும், மூங்கில் முத்துக்களும் ஆற்று நீருடன் ஓடிவந்து வயல்களில் குவிந்திருக்க (1755) திருக்கோட்டியூரில் மாம்பழங்கள், பலாப்பழங்கள், வாழைப்பழங்கள், தேங்காய்கள் ஆகியவைகளை இழுத்து ஓடும் ஆறுகள் சூழ்ந்துள்ளனவாம். (தூங்கு தண் பலவின் கனிதொகு வாழையின் கனியொடு மாங்கனிதேங்கு தண் புனல் சூழ் திருக்கோட்டி யூரானே - 1845)

ஆற்றின் நீரில் அடித்து வரப்படும் பொருட்களால், கரையோரம் வாழும் மக்கள் மட்டுமல்ல, பறவைகளும் பரவசமாக வாழ்ந்தன என்பதை திருக்குடந்தையில் சிறகுடைய அன்னம் தன் பெடையுடன் கலந்து வாழும் நீர் வளம் நிறைந்திருக்கிறது (949) என கூறி விளக்குகிறார் ஆழ்வார்.

ஓடக் காண்பது, காவிரி வெள்ளம், ஒடுங்க காண்பது யோகியர் உள்ளம் என சொல்வது போல, ஓடும் ஆற்றின் உயர்ந்த செழிப்பைப் பார்த்த நாம், நிலையாக நிற்கும் நீரிலும் வளத்தைக் காணலாம்.

நிலையான நீரிடங்களில் தாமரைகள் பூத்திருக்க அவற்றில் அமர்ந்து வண்டுகள் பாடுகின்றனவாம். (மன்னுமுது

நீர் அரவிந்த மலர் மேல் வரிவண்டு இசைபாட (1353)) மேலும் வண்டல் அலையுள் கெண்டை மிளிர, கொண்டல் அதிரும் (1362) அதாவது வண்டல் பாய்ந்த அலை நீரில் கெண்டை மீன்கள் மிளிர, அதை மின்னல் என நினைத்து மேகங்கள் ஒலி முழங்கும் என சுவையாக கூறுகிறார்.

இதே போன்ற இயற்கை காட்சிகளைக் கொண்டே நீர்வளம் நிறைந்த நாட்டை நம் கண்முன் நிறுத்துகிறார் திருமங்கை ஆழ்வார்.

**ஊர்வளம்**

நீர்வளத்தை உணர்த்த ஆற்றையும் அழகான தடாகத்தையும் வர்ணித்த ஆழ்வார், அடுத்ததாக அவர் கண்ட ஊர்களின் வளமையைப் பற்றி விவரிக்கிறார். அதற்காக அவர் முக்கியமாக எடுத்துக் கொண்டது. அங்குள்ள உயர்ந்த மாளிகைகளையும், அவற்றின் மாடங்களையும்!

மாடங்கள் செல்வ செழிப்பைக் காட்டும்படியாக மணியும், முத்தும், பவளமும் பதிக்கப்பட்டிருந்தன என்று சாதாரணமாக சொல்வது வழக்கம். ஆனால் ஆழ்வார் அதையே வெவ்வேறு கால வேறுபாட்டோடு ஒப்பிடுகிறார்.

மாடங்களில் பதிக்கப்பட்ட மணிகள் மாலை இருளை காட்டுகின்றன இரவின் இருள் என்று குறிப்பிடாமல் மாலை இருள் என ஏன் கூறுகிறார்? இரவின் இருள் மிக கருமையாக இருக்கும். மாலை இருள் சூரியனின் கதிர்கள் அப்பொழுதுதான் மறைய தொடங்கியிருப்பதால் லேசான பொன்னிறம் கலந்ததாய் இருக்கும். அதே போல் பொன்னில் பதிக்கப்பட்ட மணிகளும் இருப்பதையே அவ்வாறு குறிப்பிடுகிறார் போலும்! அத்தோடு மாடங்களில் உள்ள முத்துக்கள் நிலவொளியைக் காட்ட, பவளங்கள் பிரகாசமான சிவந்த நிறத்தோடு சூரியனின் வெயிலைப் பரப்புகின்றன என அழகாக கூறுகிறார் ஆழ்வார்.

அத்தோடு, மாடங்கள் மேலுள்ள சூலங்கள் மேகங்களைக் கிழிப்பதால் விழுந்த முத்துக்கள் மலைபோல மாளிகைகள் மீது குவிந்து கிடக்கும் (1231) என கூறுவதன் மூலம் வானளாவி உயர்ந்துள்ள மாடங்கள் செல்வ சிறப்புடையவை என காட்டுகிறார். அதே போல் வேறொரு பாசுரத்தில் சந்திரனைத் தொடும் கொடிகளுடைய மாளிகை வீதியின் முற்றத்தில் வளைக்கை பரதவ பெண்கள் முத்துக்களை நெல்லுக்குப் பண்டமாற்று செய்வார்கள் (1221) என கூறுவதும் ஒத்த கருத்துடையதே!

ஒரு நாட்டின் வளம் நன்கு அமைய அங்குள்ள தொழில்கள் சிறப்பாக அமைய வேண்டியது அவசியம். இதை அறிவுறுத்த விரும்பிய ஆழ்வார், கடல்போல நீண்டுள்ள வீதிகளில் வெண் சாந்து பூசிய மாடங்களில் படியும் சூரிய வெப்ப கதிர்களை கரும்பு ஆலைகளிலிருந்து புறப்படும் புகை மறைக்கிறது என்கிறார் (1594)

இவ்வாறு நாடு வளம் உடையதாக இருப்பின், அங்குள்ள மக்களுக்கு என்றும் மகிழ்ச்சிதானே! அந்த ஆனந்தத்தில் ஆட்டமும் பாட்டும் எங்கும் நிறைந்திருப்பதில் என்ன ஆச்சரியம் இருக்கப் போகிறது.

அந்த நாட்டில் பஞ்சு போன்ற மெல்லிய பாதங்களையுடைய மாதர்களின் தங்க சலங்கை ஒலி வீதிகளில் ஓயாது கேட்கின்றன. (1594) பெண்களின் கூந்தல் மேலிட்ட அகில் புகைகள் மேகம் போல் பரவுகின்றன (1592) என்றெல்லாம் விவரிக்கும் ஆழ்வார், வீதிகளில் நடைபெறும் திருவிழா காலத்தே மணிமயமான திண்ணைகளில் மணம் வீசும் பூக்களைச் சூடிய பெண்கள் நெருங்கி காணப்படுவதையும் (1626, 1508) அழகாக வர்ணிக்கிறார்.

**சோலைவளம்:**

நீர்வளம் நிறைந்த செல்வ வளம் சிறந்த நாட்டில் அழகான சோலைகள் ஆங்காங்கே காணப்படுவது இயற்கையே பல்வேறு ஊர்களில் பல வகையான சோலைகளைப் பார்த்து பரவசப்பட்ட திருமங்கை ஆழ்வார் அவற்றைச் சொல்லோவியமாக தீட்டுகிறார்.

திருவல்லிகேணியில் சூரிய கிரணங்கள் நுழையாத சோலைகளில் குரவ மலர்களின் மணம் எங்கும் பரவ, அங்கு ஒரு நடன காட்சி! குயில்களின் இசைக்கேற்ப மயில்கள் ஆடுகின்றன (1074) இதே காட்சியை நந்திபுர விண்ணகரத்திலும் காணலாம் (1443)

ஆனால் திருநறையூர் சோலைகளில் இதே காட்சி சற்று வித்தியாசமாக இருக்கிறது. அங்கு புள்ளி மயில்கள் நடனமாடும்போது அதற்கேற்ப வண்டுகள் தாமரையில் அமர்ந்து இசை பாடுகின்றன. (1491) இவற்றையெல்லாம். படிக்கும்போது ஒரு நடன அரங்கமே கண்முன் தோன்றுகிறதல்லவா?

அங்கு அப்படியென்றால், புன்னை செருந்தி மரங்கள் நிறைந்த திருவாலி நகரின் சோலைகளில் உள்ள பொய்கைகள் அன்னங்கள் கூடி மகிழும் சிறப்புடையன என்கிறார் ஆழ்வார். (1191)

திருநாங்கூர் சோலைகளையும் சென்று பார்ப்போம். அங்கு மல்லிகை, செருந்தி, செண்பக மரங்கள் மணம் வீசும் பூக்களைச் சொரிய, நீரில் கயல் மீன்கள் ஓடுகின்றன. (1228) மேலும் வளமுடைய சோலை புறத்தே வண்டுகளின் ரீங்காரமும் வாத்திய இசைக்கேற்ப ஆடும் நடன மாதர்களின் சிலம்பொலியும், அந்தணர்களின் வேத ஒலியும் சேர்ந்து எழும் ஒலி பலமாக அமைந்து, கடல் ஒலி போல விண்ணையே எட்டுவதாக உள்ளதாம். (1242)

அடுத்து, திருக்கண்ணங்குடி செல்வோமா? அங்கு குலைகள் செறிந்த வாழை தோட்டங்களையும் பாக்கு, குரவம், பலா, மா, குருகத்தி முதலிய மரங்கள் வளர்ந்த சோலைகளையும் (1753) காணும் நாம், மாதவி சுரபுன்னை மரங்களடர்ந்த சோலைகளில் செண்பக பூக்களில் வண்டுகள் இசை பாடுவதையும் (1756) கேட்கிறோம்.

திருவல்லிக்கேணி, திருநறையூர் போல இங்கும் ஒரு நடன காட்சி! இங்கு கானமயில்கள் ஆடும்போது பக்க வாத்தியங்களாக மேகங்கள் முரசுபோல ஒலிக்க, தேன் பருகும் வண்டுகள் இசை பாடுகின்றன (1754).

அடுத்தது திருமாலிருஞ்சோலை! மரகதம் போன்ற பிரகாசமான பச்சை நிறமுடைய உயர்ந்த மரங்களையுடைய சோலைகளில் மான்கள் நீல பாறைகளின் வழியாக சென்று அங்குள்ள தேனைப் பருகுகின்றன. (1824) அதாவது செழிப்பான மலர்கள் நிறைந்திருப்பதால், அவற்றிலிருந்து வழியும் தேன் நீரோடை போல ஓட, அதை நீரென நினைத்து மான்கள் அருந்துகின்றன என அழகாக படம் பிடித்து காட்டுகிறார் ஆழ்வார்.

**வயல் வளம்**

சோலைகளைச் சுற்றி பார்த்து விட்டீர்களா? வாருங்கள், அருகே அமைந்துள்ள வயல்களின் வளத்தையும் சென்றறிவோம்.

திருக்கோவலூர் வயல்களில் உள்ள கரும்புகள்! கோங்கு, சுரபுனனை, குரவம் பூத்திருக்கும் சோலையில் உள்ள வண்டின் இசையைக் கேட்டுக் கொண்டே வளர்கின்றனவாம் (1141) இசையால் பயிர்கள் செழிப்பாக வளரும் என்ற விஞ்ஞான உண்மையை அன்றே அறிந்து வைத்திருக்கிறார் ஆழ்வார்!

மேலும் இவ்வூரில் பாயும் தென்பெண்ணை ஆறு மூங்கில் முத்துக்களைத் தள்ளியபடி வயல்களில் புகுந்து

பொன்னை, அதாவது பொன் போன்ற நெற்பயிரை விளைவிக்கிறது. (2057)

காழிச் சீராம விண்ணகர வயல்களில் உழவர்கள் எருதுகளைப் பூட்டி உழுது கொண்டிருக்கும் பொழுது, வயல் நீரில் உள்ள சூலுடைய சங்குகள் முத்துக்களை ஈனுகின்றன. அவை அளவில் பெரியதாக இருப்பதால், அவற்றை முட்டைகள் என எண்ணும் குருகுகள் மேலே பறக்கின்றனவாம்.(1179)

அது மட்டுமல்ல, உழத்தியர் களை பறிக்க அவ்வூர் வயல்களில் இறங்குகின்றனர். அதில் உள்ள நெய்தல் பூக்களைப் பார்த்ததும் அவை தங்கள் கண்களைப் போல் இருப்பதையும், ஆம்பல் மலர்கள் தம் வாய்போல இருப்பதையும் பார்த்து பறிக்க மனம் வராமல் கரை ஏறி விடுகிறார்களாம் (1180) எத்தகைய நயமான காட்சி!

மேலும் கடல் அலையால் தள்ளப்பட்ட வலம்புரி சங்குகள் தாழை கழிகளில் புகுந்து வயல்களில் நுழைந்து, மழை நீர் ஓடும் கால்வாய் வழியே வருகின்றன. அவை தெருவில் முத்துக்களை ஈனும் காட்சியையும் அவ்வூரில் காணலாம்.(1184)

அடுத்து, அருகே அமைந்துள்ள திருவாலி நகருக்குச் செல்வோம். அங்கு நீர் நிரம்பிய வயல்களில் வளர்ந்த செந்நெற் கதிர்களின் நுனிகளை வரப்புகளில் சேர்த்து அறுத்துக் கொண்டிருக்கிறார் ஒருவர். அவருடைய முகத்தின் பக்கமாக பாயும் வாளை மீன்கள் குதித்தோடுகின்றன. அவ்வாறு குதிக்கும்போது கருப்பங்காட்டில் புகுகின்றனவாம். (1190) இவ்வாறு நீர்வளம், வயல்வளம் இரண்டுமே விளக்கப்படுகின்றன.

மேலும் அங்குள்ள வயல்களில் கலப்பைக்குத் தப்பிய தாமரை பூக்களும் நீல மலர்களும் நீர்பாயும் மடைகளில் மலர்ந்து காணப்படுகின்றன.(2027)

திருவாலி நகருக்கு அண்மையில் உள்ள திரு நாங்கூர் வயல்களில் நெற்பயிரும், தென்னை, வாழை, கமுகு மரங்களும் வெற்றிலை கொடிகளும் போட்டிப் போட்டுக் கொண்டு வளம் பெருக்குவதை காணலாம்.(1230)

மேலும் வயல்களின் நீர் நிறைந்திருப்பதால் நெற் பயிர்களுடன் தாமரை மலரும் காணப்படுகின்றது. அத்தோடு அந்த பூக்களிடையே வாளை கயல் மீன்களும் துள்ளுவது அழகான காட்சியாக அமைகிறது.(1232)

அது மட்டுமல்ல, வயலில் எப்பொழுதும் மலர்ந்திருக்கும் தாமரை, செங்கழு நீர் பூக்கள் அதிகமாக தேனைச் சொரிகின்றன. அந்த தேன் வெள்ளம் நீர் வெள்ளத்துடன் சேரும் பொழுது நீர் மட்டம் உயருவதால் உழவர்கள் மடை நீரை நிறுத்த மடைகளை அடைப்பார்களாம்.(1235)

அடுத்து, அரிமேய விண்ணகர வயல்களில் அருமையான காட்சி ஒன்றை பார்க்கிறோம். அங்கு உழவர்கள் நெற்கதிர்களை அறுக்கிறார்கள். அப்பொழுது தாமரை மலர்களும் வாளை மீன்களும் சேர்ந்து அறுபடுவதால் முத்துகள் சிதறுகின்றன. அவற்றை வாளை போன்ற நீண்ட கண்களையுடைய உழத்தியர் திரட்டி எடுப்பார்கள் (1243) என்கிறார் ஆழ்வார்.

அத்துடன் வளர்ந்த நெறகதிர்களின் மேலே பூத்த குவளை மலர் சூழலில், வண்டுகளின் ரீங்காரமும் நீண்ட கண்களையுடைய பெண்களின் பாத சிலம்பொலியும் சேர்ந்து ஒலிப்பது, மழலை போல மகிழ்ச்சியளிப்பதாய் இருக்கிறது (1279) என்றும் அவர் கூறுகிறார்.

திருப்புள்ளம் பூதங்குடியின் பள்ளமான வயல்களில் மீன்கள் துள்ளி விளையாடுகின்றன. அதை காணும் பறவைகள் அங்கே தங்கள் குஞ்சுகளுக்கு நல்ல உணவு கிடைக்கும் என்ற

ஆவலுடன் அங்கு இரை தேடும் (1349) இத்தகைய தாய்மையைக் கண்ட நாம், திருவழுந்தூரில் ஒரு தம்பதியைக் காணலாம். அங்கு வயல்களில் செந்நெற்பயிர் சாமரம் வீசுவது போல அங்கும் இங்கும் அசைகிறது. தாலாட்டு பாடுவது போல சங்குகள் முழங்குகின்றன. இதைக் கேட்டவாறு அழகிய தாமரை பூவில் பள்ளிக் கொண்ட அன்னம் தன் பெடையுடன் பொருந்தி கண் வளர்வது எவ்வளவு இனிமையான காட்சி!(1619)

திருவழுந்தூரிலிருந்து புறப்படும் நாம், திருவயிந்திரபுர வயல்களுக்கு வந்து சேர்கிறோம். அங்கு சாறு நிறைந்த கரும்புகள் விண்ணை தொடும் அளவு வளர்ந்துள்ளதையும் அதனால் நிழல் தருவதையும் காண்கிறோம் அத்தோடு அந்த கரும்புகளின் சாற்றின் சேறு கலந்திருப்பதால் நீர்நிலைகள் அழகாக காட்சியளிக்கின்றனவாம்.

வயல்களில் நெற்பயிரையும் கரும்பையும் பலவித மலர்களையும் பார்த்து இரசித்த நாம், அடுத்து மலைகளில் வளர்ந்துள்ள தாவரங்களையும் சென்று பார்ப்போம், வாருங்கள்.

## தாவர வளம்

திருவேங்கட மலையில் மூங்கில்கள் முற்றி வெடித்து, ஒளியுள்ள வெண் முத்துக்களை சொரியும் போது (1045, 1055) சிங்கவேள் குன்றத்தில் மூங்கில்கள் வானோங்கி வளர்ந்துள்ளன. அவை ஒன்றோடொன்று உராய்வதால், ஆகாயத்தில் நெருப்பு பரவி சிவந்திருக்கிறதாம். (1015) திருமாலிருஞ் சோலையில் பின்னி வளர்ந்த மூங்கில்கள் வானளாவி உயர்ந்திருப்பதால், அவற்றின் நுனிகள் மலை உச்சியில் உள்ள தேன் கூட்டைக் கிழிக்கின்றன அதனால் தேனீக்கள் கலைந்து ஓட, தேன் வெள்ளம் பெருக்கெடுக்க, எங்கும் மணம் கமழ்கிறது என்கிறார் திருமங்கை ஆழ்வார்.

கமுக மரங்களைப் பற்றிய வர்ணனையும் தந்துள்ளார் ஆழ்வார். கமுகு வெடித்து அதன் பாளையினின்று முத்து சிதறுவதையும், அதன் காய்கள் மரகதம் போல பச்சை நிறத்துடனும் பழங்கள் பவளம் போலவும் உள்ளன என்பதையும் அழகாக கூறுகிறார். (1144) மேலும் கமுக மரங்களில் அணில்கள் தாவுவதால் காய்கள் உதிர்கின்றன என்றும் அப்பொழுது அவை பலாமரத்திலுள்ள பழங்களின் மேல் விழ, அதனால் சிதைந்த பழங்கள் தேனைப் பெருக்கின (1185) என்றும் ஆழ்வார் சுவையாக கூறுகிறார்.

மரங்களைக் கண்டு மகிழ்ந்த நாம் கொடிகளையும் கண்டு குதூகலிக்கப் போகிறோம். இமய தாழ்வரைகளில் வளர்ந்த மிளகு கொடிகள், மேகத்தைத் தொடும்படியாக வளர்ந்துள்ள வேங்கை மரங்களைத் தழுவியுள்ளன. (964) மணம் பெருக்கும் குருக்கத்திக் கொடிகள் வான் ஓங்கி வளர்ந்து மேகங்களை வளைப்பதையும் (963) காணலாம்.

மேலும் மலைப்பக்கங்களில் வெற்றிலை கொடிகள் வளர்ந்து பூமியை மறைக்கும் பெருத்து வளர்ந்த முல்லை கொடி அருகிருக்கும் குருந்த மரத்தைத் தழுவி அதன்மீது ஓடி பரவுகின்றன (1364).

கொடிகளைப் பற்றி கூறும்போது அவற்றில் மலர்ந்தாடும் மலர்களைப் பற்றியும் குறிப்பிட்டாக வேண்டும். கொடி மலர்களையும் குளத்து மலர்களையும் பார்க்கும் பொழுது யாருக்குமே அவைகளைப் பெண்களோடு பொருத்தி பார்க்க தோன்றும். ஆழ்வாரும் அதைதான் செய்கிறார்.

கோங்கு பூக்கள் பெண்கள் மார்புகளைப் போன்று மலர்வதாகவும், செவ்வாம்பல் அவர்களின் உதடுகளை ஒத்திருப்பதாகவும், தாமரை பூக்கள் அவர்களின் முகங்களைப் போல விரிவதாகவும் ஒரு பாசுரத்தில் கூறுகிறார். (1263)

வேறொரு பாசுரத்தில் முல்லை பூக்கள் மாதர்களின் பற்களைப் போல மலர்வதாகவும், பானல் என்னும் நெய்தற்பூ அவர்கள் கண்களை ஒத்திருப்பதாகவும் (1509) செங்கழுநீர் பூக்கள் பெண்களின் கண்களை ஒத்து மலர்வதாகவும் (1510) கூறுகிறார்.

அதே போல் எங்கும் ஒக்க கறுத்திருக்கும் நீல மலர்களும், அரக்கு நிற ஆம்பலும், தாமரையும் செங்கழு நீரும் சேர்ந்து அங்கு வாழும் பெண்களின் கண்களையும், வாய்களையும், முகங்களையும் ஒத்து உள்ளன (1633) என்பதும் அவருடைய கூற்றுதான்!

இவ்வாறு அழகாக அசைந்தாடும் மலர்களாக மணம் வீசும் செண்பகம், மல்லிகை முதலிய பூக்கள் தங்களிடம் உள்ள தேனை வழங்கி வண்டுகளை வாழ வைக்கவும் செய்யும் பண்பைப் பாராட்டுகிறார் ஆழ்வார். (1841)

## முடிவுரை:

இவ்வாறு தன் நாட்டின் நீர்வளம், நிலவளம் மற்றும் ஊர்வளம் எப்படி இருந்தது என்பதை விளக்க கரை புரண்டோடும் ஆறுகளையும் கவின் மிகு சோலைகளையும் வாழ்வளிக்கும் வயல்களையும், வற்றாத நீர் நிலைகளையும் ஓங்கி வளர்ந்த மரங்களையும், ஒய்யாரமாய் மலர்ந்த மலர்களையும் மிக அழகாக விவரித்து, அந்த காட்சிகளை கண்முன் காண செய்து விட்டார் திருமங்கை ஆழ்வார்.



# ௬. திருமங்கை ஆழ்வாரின் உபதேசங்கள்

முன்னுரை

பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு

திருவள்ளுவர் கூறிய இந்த ஆழ்ந்த கருத்தே நம் திருமங்கை ஆழ்வார் அருளிய பல அறிவுரைகளுக்கு அடிப்படையாக அமைந்துள்ளது.

எத்தனையோ குலங்களில் பிறந்து இறந்து இளைத்த நாம் நன்மை ஒன்றும் செய்யாத நிலையில் நலம் தரும் அறத்தையும் செய்யாது பிறவிதோறும் துன்புறுகிறோம் (1031) ஆனால் கர்மம் அடியான உறவு முறைகள் இல்லாத எம்பெருமான் தனக்கு விருப்பமானவருக்கு பூமியில் பிறக்கும் பாவத்தைப் போக்குவான் (1049) என கூறிப் ஆழ்வார் நாம் உலகபற்றை விட யாரை பற்ற வேண்டும், எப்படி பற்ற வேண்டும் என்பது குறித்து விவரமாக பல பாசுரங்களில் பாடியுள்ளார்.

பெருமானை வணங்கி வாழாதவர் மனித பிறவியை மதிக்காதவர் (2039) என நமக்கு எடுத்துரைக்கிறார்.

முன்னம்சேர் வல்வினைகள் போக முகில்வண்ணன்,
பொன்னம்சேர் சேவடிமேல் போது அணிய பெற்றோமே (1980)

என நம் தீவினைகள் தீர வழி கூறுகிறார். இப்படி நாம் உய்வடைய அவர் கூறும் அறிவுரைகள் இன்னும் என்னென்ன என விளக்கமாக பார்க்கலாம்.

பிறவி வேண்டாமை

அடியார்கள் அனைவரின் குறிக்கோளும் இறைவனடியை இறுக்கமாக பற்றிக் கொண்டு, மீண்டும் பிறவாத வரம் பெறுவதுதான். காரணம் பிறவி என்பது ஒரு கூரை வீட்டில் பாம்புடன் கூடி வாழ்வது போல என்கிறார் திருமங்கை ஆழ்வார் (2024) மேலும் இரு பக்கங்களிலும் நெருப்பு எரியும் கொள்ளிக் கட்டையின் உள்ளே அகப்பட்ட எறும்பு போல என் மனம் உருகுகிறது. இனிமேலும் பலவிதமான பிறவிகளிலே புகுந்து நான் சுற்றி சுழல வேண்டும் என நினைக்காதே (2025) என இறைவனை வேண்டுகிறார்.

ஆழ்வார் அஞ்சுவதுபோல பிறவி குழியான கர்ப்பம் என்பது எவ்வளவு அனுபவித்தாலும் குறையாது வளருவது. எனவே அதில் வீழ்ந்தவர்களின் உள்ளம், வெள்ளத்தில் அகப்பட்ட நரி கூட்டம் போல தடுமாற வேண்டியிருக்கும் (2026) அத்தோடு மீண்டும் உலக வாழ்வில் தள்ளப்படுவோமோ என ஆற்றங்கரை வாழ் மரத்தைப் போலவும் (2022) சூறை காற்றில் அகப்பட்ட மரக்கலத்தில் இருப்பவர் போலவும் அடியார்கள் அஞ்ச வேண்டிய நிலையும் நேரும் (2023)

இவ்வளவு துன்பம் மிகுந்த மறுபிறவியில் மாட்டிக் கொள்ளாமல் தப்பிக்கவும் ஆழ்வாரே வழி சொல்கிறார். என்ன வழி அது என்கிறீர்களா? எல்லோருக்கும் தெரிந்த வழிதான்! ஆம், ஆண்டவனின் அருளை வேண்டுவதுதான் அது.

அடியேன் இனிமேல் பிறவியாகிற நரகத்தில் அழுந்தாமல் இருக்கவும் உன்னை அனுபவிக்கவும் அருள வேண்டும் (2030) இனிமேல் உன் அருள் அன்றி எனக்கு வேறு புகல் எதுவும் இல்லை. மற்றைய எதிலும் நான் துணியேன் (2029) என்றெல்லாம் மனமுருகி வேண்டுவோர்க்கும் பிறவாமையை அருள்வான் பேரருளாளன் என்கிறார் ஆழ்வார்.

இவ்வாறு வேண்டினால் இறையருள் கிட்டுமா என சந்தேகத்துடன் கேட்பவர்களுக்கு ஆழ்வார் பதில் சொல்கிறார். பூமாலை ஏந்தி துதித்து வணங்கும் அடியார்களை மட்டுமல்ல அவர் சுற்றத்தார்களையும் எம்பெருமான் இவ்வுலகிலிருந்து பரமபதம் புக அருள்செய்வான் (1050) என உறுதியாக கூறுகிறார்.

வணங்கினாலே போதுமா என சிலர் எண்ணலாம். அது போதாது என்பது போல மேலும் கூறுகிறார். நீ குழப்பம் அடையாமல் நல்லதான காரியங்களை செய்தால், தொண்டு செய்யும் அடியார்களின் உய்வுக்காக எம்பெருமான் பூமியில் அவதரித்து அவர்களை ஆட்கொண்டு பரமபதம் புக செய்கிறான் (1051) அத்தோடு யாவராலும் பேசப்படும் இனிய திருநாமம் ஆன எட்டெழுத்தைச் சொல்லி சொல்லி பயில்பவர்கள் உய்வு பெற எம்பெருமான் அவர்களை ஏற்று அவர்களின் பிறவி பிணிப்பைப் போக்கி அருள்கிறான் (1026) என உறுதியாக கூறுகிறார்.

இவ்வளவு நிச்சயமாக அவர் கூறுவதால் சதையே சுவராக எலும்பே தூணாக மயிரால் வேய்ந்த ஒன்பது வாசல்களை உடைய குடிசையாகிய இவ்வுடம்பை விட்டு நம் உயிர் போகும் பொழுது இறைவனின் திருவடிகளே காப்பு என்று நினைத்தால் (1006) இவ்வுலகில் மீண்டும் பிறவாமல் இறைவனை அடைந்து இன்புற முடியும்.

## முதுமை வரும் முன்பே

பொதுவாகவே இளமையில் இறைவனிடம் நாட்டம் வருவதில்லை. வயதான காலத்தில் வேறு எதுவும் செய்ய இயலாத பொழுதுதான் நேரம் இருக்கும் அப்பொழுது பார்த்துக் கொள்ளலாம் என்பதே பலரின் எண்ணம். ஆனால் அது கூடாது என்பதே ஆழ்வாரின் அறிவுரை.

முற்றிய முதுமைகாலத்தில் ஊன்றுகோலே துணையாக கொண்டு முன்னே அடி இட்டு நடக்க நேரிடும். தலை கவிழ்ந்து முறிந்தது போலே தடுமாறி, மெள்ள உட்கார இளைப்பு உண்டாகும். (968) ஒரு கையால் கொம்பு ஊன்றி கொண்டு மற்றொரு கையால் முதுகைப் பிடித்துக் கொண்டு உடல் நடுங்க நடக்கும்பொழுது மேல் மூச்சு எழும், இருமல் மேலிடும். (969)

முதுமை காலத்தில் சதைப்பற்று உலர்வதாலே உடல் நரம்புகள் ஊறிக் கயிறுகள் போல புடைத்து இருக்கும், நடக்கும் வழியில் மேலே செல்ல முடியாதபடி கண் சுழன்று மனம் தளர்ந்து நடுக்கம் ஏற்படும் (970) கிழத்தனத்தில் கண்கள் இடுங்கி பீளை வழியும் பித்தம் மேலிட்டு இருமல் உண்டாகும். கால்கள் இரண்டும் முட்டி, தடுமாறி நடக்க நேரும்.(971)

இவ்வாறெல்லாம் கஷ்டப்படும்போது எங்கே இறைவனை நினைக்க தோன்றும்? எனவே கிழட்டுத்தனம் வரும் முன்னமேயே பெருமானை வணங்க வேண்டும் என வலியுறுத்துகிறார். தளர்ந்த பேச்சுடன் கோழையாலே இளைத்து, இருமிக் கொண்டு உடல் மெலிந்தபடி பைத்தியக்காரன் போல் சித்தம் வேறுபட்டு பேசி அயர்வதற்கு முன்பேயே (973) இறைவனை அடைக்கலம் புக வேண்டும் என்கிறார் ஆழ்வார்.

## புலன்வழி போகாதிருத்தல்

இறைவனிடம் நம் எண்ணத்தை நிலை நிறுத்த முடியாமல் தடுமாற செய்வதில் முதலிடம் வகிப்பது புலன் இன்பங்கள்! ஒளி கூடிய புன்சிரிப்பும் பருத்த தோள்களும் கொண்ட பெண்களின் அழகான மார்புகளையே பயனாக கருதுபவர்கள், அச்செயலை அறிவற்றது என உணர்ந்து பிறவிநோயை போக்க எண்ணுவதில்லை(998) அறமே வடிவான இறைவனை சற்றும் நினையாமல் புலன் இன்பங்களின் மோகத்தைப் பெருக்கி காலத்தை வீணாக கழிக்கிறார்கள் (999).

காதல் செய்து இளையவர் கலவி தரும்
வேதனை வினை அது வெருவுதல் ஆம் (1455)

என்பது போல இளைய பெண்களின் காதல் தொடர்பால் ஏற்படும் கலவி முடிவில் துயரத்தையே விளைவிக்கிறது.

மேலும் மான்பார்வை உடைய மாதர்களின் சந்திரனை ஒத்த முகத்தில் புரளும் சதைப் பற்றுக் கண்களாகிய அம்புக்குத் தளர்ந்து போகிறவர்கள் (1470) பெண்களின் மயக்கத்தில் இவ்வுலகில் பலவகையான நரகம் புகும்படியான பாவங்களைச் செய்கிறார்கள் (1029)

அப்படிப்பட்டவர்களுக்கு ஆழ்வார் கூறும் அறிவுரை இதோ இப்பொழுதாவது வருந்தி இறைவனிடம் சென்று அலைந்தேன் வந்து அடைந்தேன் அடியேனை ஆட் கொண்டருளே (1031) என்று அடைக்கலம் புகுந்தால் உய்வடைய வழி உண்டு.

வாடினேன் வாடி வருந்தினேன் மனத்தால்
பெருந் துயர் இடும்பையில் பிறந்து
கூடினேன் கூடி இளையவர் தம்மோடு
அவர் தரும் கலவியே கருதி
ஓடினேன் ஓடி உய்வது ஓர் பொருளால்
உணர்வு எனும் பெரும் பதம் தெரிந்து
நாடினேன், நாடி நான் கண்டு கொண்டேன்
நாராயணா என்னும் நாமம் (948)

என்ற பாசுரத்தில் பிறவி துயரம், புலன்களின் துயரம் போன்ற எல்லா துயரங்களுக்கும் தீர்வு சொல்கிறார்.

பெண்ணாசை மட்டுமல்ல, பொன்னாசையும் கூட நம்மை இறைவனிடமிருந்து பிரிக்கவல்லது. வென்றியே வேண்டி வீழ் பொருட்கு இரங்கி (951) என்பது போல வெற்றியே வேண்டி

அழியும் தன்மையான செல்வத்தைப் பெற வருந்துகிறோம். 'சூதினைப் பெருக்கிக் களவினைத் துணிந்து, கரி குழல் மடந்தையர் திறத்துக் காதலே மிகுத்துன்' (1000) கண்டபடி திரிகிறோம்.

ஆனால் உலகாண்ட மன்னர்களுக்கும் மரணம் உண்டு. முன்பு ஆண்டவர் மாண்டனர் என்னும்படி செல்வம் நிலையற்றது 'ஆண்டார் வையம் எல்லாம் அரசு ஆகி, முன் ஆண்டவரே மாண்டார் என்று வந்தார்' (1462)

அது மட்டுமல்ல, வறுமையால் வாடி ஒரு களம் சோறு இடுங்கள் என்று கேட்டவர்களுக்கு 'இரந்தவர்க்கு இல்லையே என்று நெடுஞ்சொலால் மறுத்த நீசன்' (1002) ஆகிறோம். நீதியற்றவற்றை மனதில் எண்ணி, வாயால் பேசி தவறு செய்கிறோம். நெஞ்சினால் நினைந்தும் வாயினால் மொழிந்தும் நீதி அல்லாதன செய்தும் (1004) கோபத்துடன் தீச்செயல் செய்து நாய்களுடன் சென்று வேட்டை ஆடி மகிழ்ந்து பிராணிகளைக் கொல்கிறோம் (1003) மொத்தத்தில் 'எப்பாவம் பலவும் இவையே செய்து, இளைத்தொழிந்தேன்' (1031) என நாம் ஒவ்வொருவரும் வருந்தும் நிலையில் வாழ்கிறோம்.

நாம் பிள்ளை பருவத்தில் அறிவின்றி பல தீமைகள் செய்கிறோம். பெரியவர்கள் ஆன பின்பு பிறர்க்கு உழைத்து வீணாகிறோம் (1034)

சர்வரோக நிவாரணி என சொல்வது போல நம்முடைய பாபம் எத்தகையதாக இருந்தாலும், அதைப் போக்கி அருள் செய்யக்கூடியது இறைவனின் அருள் ஒன்றுதான். ஆயன் அடி அல்லது மற்று அறியேனே (1045) என பெருமானிடம் சரணாகதி அடைய வேண்டும்.

பெற்ற பிள்ளைகள், மனைவியர் ஆகிய உறவினர் கடைசி காலத்தில் துணை ஆகார் என்பதை அறிய வேண்டும் என்கிறார் ஆழ்வார். எனவே 'நீ பணித்த அருள் என்னும்

ஒள்வாள் உருவி எறிந்தேன், ஐம்புலன்கள் இடர்தர, எறிந்து வந்து செறிந்தேன், நின் அடிக்கே' (1461) என்றவாறு ஆண்டவனின் அருள் ஒன்றுதான் நமக்கு கதி என அறிவுறுத்துகிறார்.

ஆக திருமங்கை ஆழ்வார் நமக்கு அருளும் அறிவுரை ஒன்றே ஒன்றுதான் - தீயை உமிழ்வது போன்ற கொடிய பாவங்கள் நெருங்கிய உறவினர்போல் நம்மை பிரியாமல் நரகில் தள்ள விரையும் நேரத்தில் பெருமானிடம் அடைக்கலம் புகுவதுதான் நாம் செய்யக்கூடிய ஒரே செயல்.(1465)

**இன்னும் சில**

ஆழ்வார் மேலும் பொதுவான சில அறிவுரைகளைக் கூறுகிறார். 'பூண்டு அவத்தம் பிறர்க்கு அடைந்து தொண்டு பட்டுப் பொய்ந் நூலை மெய்ந்நூல் என்று என்றும் ஓதி, மாண்டு அவத்தம் போகாதே' (1089) அதாவது வீண் செயல்களை மேற்கொண்டு, தாழ்ந்தோர்க்கு அடிமை செய்யாதீர், பொய்யான நூல்களைக் கற்று மெய் என நம்பி வீணாகாதீர் என்று அறிவுறுத்துகிறார்.

அத்தோடு தந்தை, தாய், மக்கள், உற்றார் என்று பற்றி நிற்கிற பந்தபாசம் நிறைந்த வாழ்க்கையை வெறுத்து அது தவறென உணரவேண்டும் (1808) என்றும் கூறுகிறார்.

மேகத்தைத் தொடும் வெண்குடை கீழ் யானைகள் சூழ அரசராய் ஆண்டவர்களும் இறந்து போவார்கள் என்பதை எண்ணி பார்க்க வேண்டும் (1812) நித்தியமான ஆத்மா நுண்வடிவில் பருத்த உடலில் புகுந்து பிறவி எடுத்ததும், தசை பொதிந்த நரம்பும் தோலும் கூடிய குடிசையான உடலில் புகுந்ததும் ஐம்புலன்களால் ஆத்மா துன்புறுவதையும் எண்ணி அஞ்ச வேண்டும் (1813).

மேகம் பரவும் வானம், தீ, நீர், நிலம், காற்று ஆகியவற்றில் ஒன்றிய உடல் நம்மை காக்கும் அரண் ஆகாது

என்பதை உணரவேண்டும் (1815) நோய்களால் ஆன உடம்பை உண்மை என்று பேசும் அறிவிலிகள் கருத்தை பிழை என்று தெரிந்து கொள்ள வேண்டும் என்றும் ஆழ்வார் அறிவுறுத்துகிறார்.

முடிவுரை:

இவ்வாறு திருமங்கை ஆழ்வார் அருளிய அறிவுரைகளைக் கேட்டு நடப்பவர்களின் இறுதி காலத்தில் யமதூதர்கள் அணுகாமல் நாங்கள் தாழ்ந்தவர்கள், அஞ்சுகிறோம் என்று கூறி தொடாதபடி இருக்கவும் (1743) திருடர்களைப் போல் அஞ்சி ஒதுங்கவும் (1744) இறைவனே காவலராய் இருப்பான்.

அவனுடைய திருநாமம் பயின்றவர்களுக்குத் தொண்டு புரியும் நற்குலத்தைத் தரும், செல்வம் தரும், அடியார்படும் துயரங்களைத் தரைமட்டம் ஆக்கும் பரமபதத்தைக் கொடுக்கும். இறைவன் அருளையும் கைங்கர்யம் செய்யும் இடத்தையும் தரும், பகவானை அனுபவிக்கும் சக்தியையும் தரும். இன்னும் பல நன்மைகளைச் செய்யும். பெற்ற தாயை விடவும் நன்மை செய்து ஆத்ம ஞானத்தையும் தரும் என பட்டியல் இடுகிறார் ஆழ்வார் (956)

அவ்வாறு யாவராலும் பேசப்படும் இனிய திருநாமம் ஆன எட்டெழுத்தைச் சொல்லிச் சொல்லி பயில்பவர்கள் உய்வு பெற எம்பெருமான் அவர்களை ஏற்று, அவர்களின் பிறவிப் பிணைப்பைப் போக்கி அருள்கிறான் (1026) என்கிறார் திருமங்கை ஆழ்வார்.



# 7. தனிமையில் வேதனை - இருவரின் வர்ணனை

முன்னுரை:

கோல்ரிட்ஜ் என்பவர் இம்மனித வடிவினை ஆட்டி வைக்கிற எல்லா எண்ணங்களும் எல்லா உணர்ச்சிகளும் எல்லா இன்பங்களும் காதலின் செயலாற்றுப் பணியாளர்களே என்கிறார். இவர் மட்டுமல்ல, ஆணுக்கும் பெண்ணுக்கும் இடையேயுள்ள இந்த ஈர்ப்பு சக்தியைப் பற்றி பாடாத கவிஞர்களோ, புலவர்களோ இல்லை என்றே சொல்லலாம்.

தமிழ் இலக்கியத்திலோ அகம், புறம் என்ற பிரிவினை மிகப் பழங்காலத்திலேயே உருவாகியிருந்தது. செம்புலப் பெயனீர் போல அன்புடைய நெஞ்சந் தாங்கலந்தனவே என்பது போல தலைவனும் தலைவியும் அன்பால் இணைவதே அக வாழ்வு.

இவ்வாறு இணைந்தவர்கள் ஏதாவது ஒரு காரணத்தால் பிரிய நேரும்போது, தூண்டிலில் மாட்டிக் கொண்ட புழு உயிருக்குத் துடிப்பதைப் போல, காற்றில் அகப்பட்டுக் கொண்டு தத்தளிக்கும் சுடர் விளக்கினைப் போல தலைவி வருந்த நேருகிறது. (தூண்டில் புழுவினைப் போல வெளியே சுடர் விளக்கினைப் போல - பாரதியார்)

கூண்டுக்கிளியைப் போல தனிமையில் மிகவும் நொந்து, வேண்டும் பொருளையெல்லாம் மனம் வெறுத்து விட்ட நிலையில் தலைவி வருந்துவதை எத்தனையோ புலவர்கள் பாடியிருந்தாலும், அதை ஆழ்வார்கள் பாடும் அழகே தனிதான்! அதுவும் ஏறக்குறைய ஒரே விதமாக திருமங்கை ஆழ்வாரும், நம்மாழ்வாரும் அந்நிலையை வர்ணிப்பது அனுபவித்து படிக்க வேண்டிய ஒன்று! இப்பொழுது அதைப்பற்றி சற்று பார்ப்போம்.

## இன்னல் தரும் இரவு

தனித்திருக்கும் எந்த தலைவிக்குமே இரவு என்பது இன்னல் தருவதற்காகவே படைக்கப்பட்டது போல தோன்றும். அந்த நேரத்தில் அவள் படும் அவஸ்தை விவரிக்க இயலாதது. என்றாலும் இலக்கிய திறன் கொண்ட ஆழ்வார்கள் அதையும் அற்புதமாகவே செய்திருக்கிறார்கள்.

முதலில் திருமங்கை ஆழ்வார் காட்டும் தலைவியின் நிலையை பார்ப்போம். ஊராரும் உலகினரும் உறங்கும் நேரத்தில் 'ஊரும் துஞ்சிற்று, உலகமும் துயின்றது, ஒளியவன் விசும்பு இயங்கும் தேரும் போயிற்று திசைகளும் மறைந்தன, செய்வது ஒன்று அறியேனே! (1689) என அவள் புலம்பி கொண்டிருக்கிறாள் (1689)

இணை இல்லாத ஒளி உடைய வெப்ப சூரியனின் ஆட்சி முடிந்து, நடுக்கத்தை உண்டாக்கும் இருள் அரசன் பூமி முழுவதும் ஆட்சி செலுத்த ஆரம்பித்தான். தனிமையில் இருந்ததால். அந்த இரவு அவளுக்கு ஊழி காலம் போல் நீண்டதாக தோன்றுகிறது. (2490) தன்னை அழிக்க நெருங்கிய அந்த ஓர் இரவே நாளாகவும், மாதமாகவும், வருடமாகவும், கற்பமாயும் தோன்றியது என சொல்கிறவள், அந்த இரவு மிகவும் நீண்டது என்பதை வலியுறுத்த அது ஆயிரம் கற்ப காலமாக நீள்கிறது என ஆதங்கபடுகிறாள் (2547)

ஆனால் அதே இரவு பொழுது தலைவனுடன் கூடி இருக்கும் பொழுது நாழிகையைக் கூறிட்ட நொடிபோல விரைவில் மறைகிறது. இவ்வாறு சிறுமையும் செய்து பெருமையும் சேர்க்கும் இரவின் சாமர்த்தியத்தை எண்ணி தலைவி வியக்கிறாள் (2493).

பிறகு 'முன்பும் பலபல இருட்பொழுதுகளைக் கண்டுள்ளோம். இந்த பரந்த இருள் பொழுது போல நாம்

வேறொரு பொருளைக் கண்டதும் இல்லை. கேட்டதும் இல்லை' (2526) என்றும் அலுத்துக் கொள்கிறாள்.

'துணையும் இல்லை, சூரியனும் கடலில் மூழ்கி மறைந்தான். இந்த அந்தி வேளை என் உயிரை முடிக்கவா வந்துள்ளது?' (1692) எனவும் 'ஒளி தரும் சூரியன் மறைந்தான், பாவியேன் இணை கண்கள் துயிலவில்லை, ஊழிகாலத்தை விடவும் நீண்டு வளரும் இரவு நாழிகைகள் ஒழிவதை காண்கில்லேன்' (1693) எனவும் தலைவி வருந்தும் போது இரக்கமில்லாத அந்த இரவு பொழுதின் மீது நமக்கும் கோபம் வருகிறது. அந்த அளவிற்குத் தத்ரூபமாக தலைவியின் உணர்ச்சிகளை திருமங்கை ஆழ்வார் விவரித்திருக்கிறார்.

இதே போல் இரவில் தனித்திருக்கும் தலைவியை நம்மாழ்வார் நயமாக சித்தரிப்பதைக் காணலாம்.

தலைவி புலம்புகிறாள் - 'ஊரில் உள்ளோர் எல்லோரும் உறங்கி விட்டனர். உலகமெல்லாம் இருட்டு பரவி விட்டது. நீரிலும் நிலத்திலும் வாழும் எல்லா உயிரினங்களும் உறங்கியதால் ஒலி அடங்கி விட்டது. ஐயோ, இந்த இரவு நேரமும் நீண்டு செல்கிறது. கொடிய வினையேன் ஆன என் உயிரைக் காப்பவர் யார்? (3374) ஆழ்ந்த கடல், மண், வானம் ஆகியவற்றை மூடியபடி பெரிய விகாரமுடன் இந்த இருள் வளர்கிறது. பாவியேன் நெஞ்சே, நீயும் எனக்குத் துணை இல்லையே! (3375) பெண்ணாக பிறந்தவர் துன்பத்தைக் காண விரும்பாமல் சூரியன் மறைந்தானோ' (3377) என.

இவ்வாறு வருந்தியவள் மேலும் கூறுகிறாள். 'உருகுவதே நிலையாக பெற்ற என்னை போல நீண்ட வானமும் உருகுகிறது. நான் கண்ணீர் பொழிவது போல வானமும் நுண்ணிய பனித் துளிகளைப் பொழியும் இரவாயிற்றே! (3383) செறிந்த இருளுடன் நுண்ணிய

பனித்துளிகளும் கொண்டது இந்த இரவு. பனித்துளிகளின் காரணமாக குளிர்ச்சியாக இருக்க வேண்டும். ஆனால் அதற்கு மாறாக இரவு கொடிய நெருப்பை விடவும் அதிகமாக சுடுகிறதே! இந்த இன்னல்மயமான இரவை முடிக்க அழகிய ஒளியுடன் சூரியன் பெரிய தேரில் வரும் காலை பொழுது இன்னும் புலரவில்லையே!' (3382)

இவ்வாறு ஆழ்வார்கள் இருவரும் தலைவியின் தவிப்பை தத்ரூபமாக சித்தரிக்கிறார்கள்.

### வருத்தும் வாடைக்காற்று

இரவாகிய ஒரு எதிரியையே சமாளிக்க இயலாமல் சஞ்சலபடும் தலைவியை வதைக்க, வாடைக் காற்றும் வந்து கூட்டணி அமைத்துக் கொள்கிறது.

திருமங்கை ஆழ்வாரின் தலைவியிடம் செல்லும் வாடை வடவை கனல் போல் வீசுகிறது. (பொங்கு அழலே ஒக்கும் வாடை சொல்லில் - 1790) அவள் பெருமானது கரிய திருமேனியை சேவித்த காரணமாய் வாயால் பிதற்றிக் கொண்டு திரியும்போது, குளிர்ந்த வாடையோ அவளின் உடலின் உள்ளே புகுந்து பிளந்து அவளுக்குச் சோர்வை உண்டாக்கி துன்புறுத்துகிறது (2698) என்கிறார் ஆழ்வார்.

அடுத்து நம்மாழ்வாரின் நாயகியைப் பார்ப்போம் குளிர்ச்சியே இயல்பான வாடைக்காற்று அவ்வூரில் இவள் மீது படும்பொழுது மட்டும் தன் இயல்பை விட்டு வெப்பம் வீசுகிறதே (பனிப்பு இயல்வாக உடைய தண்வாடை இக்காலம் இவ் ஊர்ப் பனிப்பு இயல்வு எல்லாம் தவிர்ந்து எரிவீசும் - 2482) என தோழியோடு சேர்ந்து நாமும் தலைவியின் நிலை குறித்து வருந்துகிறோம்.

அது மட்டுமல்ல, அகில் புகை மீது பட்டு, சந்தனக் குழம்பைத் தாவி வீசும் வாடைக்காற்று யாழ் இசையையும் பஞ்சம பண்ணையும் தாங்கி வருகிறது. அது மல்லிகை மீது மோதி, தலைவியிடம் வரும்போது மட்டும் நெருப்பைக் கொட்டுகிறது, அவள் உயிரையும் எடுக்கிறது!(3875)

அவளைப் பொறுத்தவரை 'வாடை, தண்வாடை வெவ்வாடை ஆலோ!' (3872) 'புதுமணம் முகந்து கொண்டு எறியும் ஆலோ! பொங்கு இளவாடை புன்செக்கர் ஆலோ!' (3876) என்பது போல வாடை வெம்மையாய் தகித்து நலிய செய்கிறது.

## தென்றல் தீயானது

மேற்சொன்ன கூட்டணியின் மூன்றாவது அங்கத்தினராக தென்றல் வந்து சேர்ந்து கொண்டது. அது படுத்தும் பாட்டைக் காணலாம்.

திருமங்கை ஆழ்வாரின் தலைவிக்கு கடல் அலைகள் மீது மோதிவரும் பனித் திவலைகள் நெருப்பாகின்றன. அந்த திவலைகள் மீது பட்டு வீசும் தென்றலும் கொதிக்கின்றது. அந்த தென்றல் வீசாமல் திரும்பினால்தான் அவள் உயிர் அவளிடத்தில் தங்கும் போலும் (1691)

'திண் திமில் ஏற்றின் மணியும் ஆயன் தீம் குழல் ஓசையும் தென்றலோடு.... பாவியேன் ஆவியை வாட்டம் செய்யும்' (1792) என கூறும் அவளை எப்படி தேற்றுவது?

அது மட்டுமல்ல பாண்டிய அரசனின் பொதிகை மலையிலிருந்து வரும் தென்றல் காற்று சந்தன பூந்தாதுக்களை அளைந்தபடி உலகோர் மனம் மகிழும்படி வீசுவது தனக்கு மட்டும் நெருப்பை அள்ளி வீசுவதாயிற்றோ (2757) என அவள் அரற்றுவதைப் பார்க்க வருத்தமாக இருக்கிறது.

இனி இதே கருத்தை நம்மாழ்வார் எப்படி நயம்பட சொல்கிறார் என பார்ப்போம். தனிமையில் தவிக்கும் தலைவி கூறுகிறாள்-'தொட்டுத் தடவும் குளிர்ந்த தென்றல் காற்று இப்பொழுது கொடிய தீயை விடவும் அதிகமாக சுடுகிறது (தை வந்த தண் தென்றல் வெம் சுடரில் தான் அடுமே - 3381) மல்லிகை வாசனையை சுமந்து வரும் தென்றல் உடம்பை அறுக்கிறது' (3869)

இவ்வாறு அவளை வருத்தும் அதே தென்றல் அவளுக்கு எப்பொழுது மகிழ்ச்சியைத் தருகிறது? தலைவனின் (பெருமாளின்) திருமுடியில் சூடியுள்ள திருத்துழாயைத் தொட்டு அளைந்த தென்றல் தலைவியின் மீது படும்பொழுது அளவில்லாத ஆனந்தம் தருவது ஆச்சரியமாக இருக்கிறதே! (2551)

## நிலவு நெருப்பானது

வாடையும் தென்றலும் வாட்டிக் கொண்டிருக்கும் நேரத்தில் வேடிக்கை பார்க்க வந்த நிலவு தானும் வேதனை செய்து பார்த்தால் என்ன என நினைத்தது போலும்

திருமங்கை ஆழ்வாரின் தலைவி, தலைவனின் திருவருளை பெறுவதற்கான காலத்தை எதிர்பார்த்திருக்கையில் சந்திரனின் அமுத கிரணங்கள் அவளைச் சுடுகின்றன. (1688) 'தூய மா மதிக்கதிர் சுட, துணை இல்லை' (1690) 'அழன்று கொடிது ஆகி அம் சுடரில் தான் அடுமால்'(1783)

மேலும் வாடையும் நிலவொளியும் ஒன்று சேர்ந்து அவளை அல்லல்படுத்துகின்றன. எப்படி? வாடையாகிற குளிர்காற்று மலரும் மல்லிகைப் பூக்களில் பட்டு சந்திரன் ஒளியுடன் கலந்து எங்கும் திரிந்து வந்து அவளைத் துன்புறுத்துகிறதாம்! (1789)

நம்மாழ்வாரின் நாயகியும் அதே போன்ற துயருக்கு ஆளாகிறாள். பெரிய தாமரை பூவைக் குவிய செய்யும் சந்திரன் ஆம்பலை மலர செய்கிறான். அவன் வீசும் வெண்மையான ஒளி நஞ்சுபோல் என்னை கொல்கிறது, என் வெளுத்த வளையல்களையும் கழல செய்கிறதே (நுங்கள் வெள் வளைக்கே விடம் போல் விரிதல் இது வியப்பே - வியன் தாமரையின் தடம் போது ஒடுங்க மெல் ஆம்பல் அலர்விக்கும் வெண் திங்களே' (2553)

'சூழ்கின்ற இரவில் சுருங்காத இருளின் கறுத்த திண்மையைப் பிளக்கவல்லது இளஞ் சந்திரன். ஆனால் அதே வலிமையை என்னிடம் காட்டி என்னையும் பிளப்பதேன்? என் உடல் நிறத்தை இன்னும் குறைக்க வந்த சந்திரன் எனக்கு என்ன வாழ்வு அளிக்கிறான்? போதும், போதும், இவன் செய்யும் துன்பம்' (2549) என்றெல்லாம் அரற்றும்படி அவளை வருத்த எப்படிதான் சந்திரனுக்கு மனம் வந்ததோ?

## மற்றவைகளால் மன வருத்தம்

வாடையும் தென்றலும் வண்ண நிலவும் தலைவியை பாடாய்படுத்துவது போதாதென மற்ற உயிரினங்களும் அவளை வேதனைப்படுத்துகின்றன.

திருமங்கை ஆழ்வாரின் தலைவி, பெருகிபாயும் நுண்பனிக்கு ஒடுங்கும் பெண் பறவையை ஆண் பறவை தன் சிறகுகளின் கீழே அணைப்பதைக் காண்கிறாள் (1695) பசுக்களைத் தழுவும் காளையின் மணியோசையும் தழுதழுத்துப் பேசும் அன்றில் குரலும் அவள் உயிரை வாட்டுகின்றன. (1696)

அது மட்டுமல்ல, இடிபோல் கனைக்கும் குரலுடைய கருத்த காளையின் மணி நா ஓசை, தீயை விடவும் கொடியதாய்

அவளைச் சுடுகிறது. (1784) சோலைகளில் உள்ள மடல் விரிந்த பனைமரங்களில் வாழும் அன்றிலின் தழுதழுத்த குரல், மன்மதன் அம்பால் ஏற்பட்ட புண்ணில் வேல் நுழைந்தது போல கொடுமையாய் இருக்கிறது. (1778)

இவ்வாறு இவள் படும் துயரத்தைத் துடைக்க முடியாமல் அவளுக்காக அனுதாபப்படுவது ஒன்றை மட்டுமே செய்ய முடிந்த நிலையில், நம்மாழ்வார் இதே துயரத்தை எவ்வாறு விவரிக்கிறார் என பார்ப்போம்.

நாயகி தனிமையில் வாடும் பொழுது பெண் குயில்கள் அவற்றிற்கு உயிரான ஆண் குயில்களுடன் சேர்ந்து கூவுவதால் அவளுடைய உயிர் நோவடைகிறது. (இன் உயிர்ச் சேவலும் நீரும் கூவிக்கொண்டு இங்கு எத்தனை என் உயிர் நோவ மிழற்றேன் மின் குயில் பேடைகாள் - 3825) அத்தோடு தலைவனின் திருநாமத்தைக் கூறி கூவும் குயில்கள், அப்பெயர் நெஞ்சை பிளக்கும் யமனாக உள்ளது என்று அவள் கூறிய பிறகும் அவ்வாறு கூவி அவளைக் கொல்கின்றன. இதற்காகவா அவள் பழஞ்சோற்றைத் தயிரில் கலந்து அவைகளுக்கு ஊட்டினாள்? பால் சோறும் போட்டாள்? (3832)

மயிலும் சேவலும் சேர்ந்து உயர்ந்த குரலில் கூவுவதும் அவளைத் துன்புறுத்துகிறது. (3828) அன்றில் பேடைகள் காதலுடன் கரைந்து ஏங்கி கூவுவது நாயகன் நினைவை மேலும் வளர்க்கிறது. (3826) பெண் அன்றில்கள் தம் துணையுடன் கூடிக் குலவி விளையாடுவதும் அவளுக்குத் தலைவனின் நினைவை உண்டாக்குகிறது.(3827)

மேலும் கலந்து பழகும் வண்டுடன் கூடிய தும்பிகளின் இசை காதில் படும்பொழுது, புண்ணான தொளையில் வேலைக் குத்துவது போல துன்புறுத்துகிறது. (3833) கண்ணனை நிறத்தில் ஒத்துள்ள மேகங்கள் அவனின் கௌத்துபம் போல ஒளி வெட்டும்

மின்னலைக் காட்டி அவன் வடிவத்தை நினைவுறுத்துகின்றன. (3831)

கழுத்து மணி ஒலிக்க வலிய காளைகள் அழகிய பசுக்களைத் தழுவி கலவி இன்பத்தில் குதிப்பதைக் காணும் பொழுது அவள் என்ன சொல்லி உய்வாள்? (3878) அவளுடைய தனிமையைப் பற்றி கவலைப்படாத காளைகளின் கழுத்தில் உள்ள மணியோசை, தென்றல், ஆம்பல், குழலோசை, சந்தனம், பஞ்சம பண் போன்றவை அவளை மிகவும் வருத்துகின்றன.(3870)

இவ்வாறு இரு நாயகியரையும் இயற்கையும் சேர்ந்து இன்னல் படுத்துவது கண்டு வருத்தப்படாதவர்களே இருக்க முடியாது.

## தோழியர் பேச்சு

தவிக்கும் தலைவியைத் தேற்றி தலைவனுடன் சேரும் வழியைச் சொல்ல வேண்டியது ஒரு நல்ல தோழியின் கடமையாகும். ஆனால் தலைவியின் தனிமை துயரை கண்டும் அவளை ஏசிபேசும் சில தோழிகளும் இருக்கத்தான் செய்கிறார்கள்.

ஆனால் திருமங்கை ஆழ்வாரின் தலைவி அதைப் பற்றி கவலைப்படவில்லை. 'நானோ இரவில் தூங்காமல் கிடக்கிறேன். ஆனால் தூக்கமே இயல்பாக உடைய வளையல் அணிந்த பெண்கள் என்னைப் பழிக்கிறார்கள்.' (1789) (ஓர் இரவும் உறங்கேன் உறங்கும், பேதையர் பேதைமையால் இருந்து பேசிலும் பேசுக) என்கிறாள். மேலும் 'என்னை என் தோழியர் இரவும் பகலும் ஏசினால் ஏசட்டும், நல்லவரான அவர்கள் திறத்தை நான் அறியேன். எனக்கோ வெட்கம், மடம், பயம் ஏதுமில்லை. வாய் போனபடி பேசி அவர்கள் சிரித்தாலும்

அதற்காக நான் என் தலைவனை மறக்க மாட்டேன்' (1792) என துணிவோடு பேசுகிறாள்.

அவ்வாறே நம்மாழ்வாரின் நாயகியும் சில தோழிகளால் நலிவுறுகிறாள். தாய்மாரும் தோழியரும் அவளுக்கு இரங்காமல் நீண்ட இரவில் உறங்குகின்றனர். (அன்னையரும் தோழியரும் நீர் என்னே! என்னாதே நீள் இரவும் துஞ்சுவரால் - 3378) இருந்தாலும் கலங்காது கூறுகிறாள் - 'என் உடலில் தோன்றிய மெய்ப்பாடுகளைக் கண்டு எல்லோரும் கூடி பழி தூற்றுகிறீர்கள். ஆனால் அதனால் என் காதல் குறைந்ததா? மாறாக, அக்காதல் மண்ணுலகம், கடல், வானம் ஆகியவற்றையும் விட பெரியதாக வளர்ந்து விட்டது.' (3590)

ஆக, தலைவியின் காதல் மேலும் வளர தோழியரும் ஒரு விதத்தில் உதவத்தான் செய்கிறார்கள்!

**வளைகள் கழலுதல்**

என்னதான் வெளிப்பார்வைக்கு தோழிகளிடம் துணிவாக பேசுவது போல காட்டிக் கொண்டாலும் உள்ளுக்குள் தலைவி தனிமையால் தவிக்கிறாள். அதன் விளைவாக அவள் உடல் மெலிய கையில் அணிந்த வளையல்கள் நழுவுகின்றன.

இதை திருமங்கை ஆழ்வார் 'ஆயன் மாயமே அன்றி மற்று என் கையில் வளைகளும் இறைநில்லா' (1690) 'செங்கண் நெடிய கரிய மேனித் தேவர் ஒருவர் இங்கே புகுந்து என் அங்கம் மெலிய, வளை கழல' (1794) 'கனவினில் அவன் தந்த மனம் செய் இன்பம் வந்து உள் புக வெள்கி, என் வளை நெக இருந்தேனை' (1696) என்றெல்லாம் பாடி உணர்த்துகிறார்.

இப்படி இவள் வாட, நம்மாழ்வார் காட்டும் நாயகி - உன் பிரிவால் எம் உயிர் தீயில் இட்ட மெழுகு போல உருகுகிறது. எம் வளையும் மேகலையும் கழல்கின்றன. (வேம் எமது உயிர் அழல் மெழுகில் உக்கு வெள்வளை மேகலை கழன்று வீழ - 3918) என தன் தலைவனை எண்ணி கூறுகிறாள்.

**முடிவுரை:**

'முட்டுவேன் கொல் தாக்குவேன் கொல்.... அலமரல் அசைவளி அலைப்ப என் உயவுநோய் அறியாது துஞ்சும் ஊர்க்கே' என குறுந்தொகை நாயகி இரவில் தனியாக விழித்திருந்து வேதனையுறுவதைப் போல, ஆழ்வார்களின் அழகிய தலைவியரும் அல்லல்படுவதைப் பார்த்தோம்.

வாடைக்காற்றும், தென்றலும், வண்ண நிலவும் எப்படியெல்லாம் தலைவியைத் தவிக்க செய்யும் என்பதை ஆழ்வார்கள் அருமையாக வர்ணித்துள்ளனர். மற்றவர்களுக்கு சுகமாக இருக்கும் அவை 'அன்றாய் அரிதாய் அகத்தே சுட்டு உருக்கும் வெந்தீ ஒன்றே உலகத்து உறுநோய் மருந்து இல்லது' என சீவக சிந்தாமணி சித்தரிக்கும் காதல் நோயால் தாக்கப்பட்டிருப்பதால் தலைவிக்கு மட்டும் தாங்க முடியாத துன்பத்தைத் தருகிறது.

மாலைநோய் செய்தல் மணந்தார் அகலாத

காலை அறிந்தது இலேன்

என வள்ளுவர் கூறுவதைபோல, இத்தனை நாட்களாக அறியாத இந்த தனிமைநோயை இப்பொழுது அனுபவிக்கும் ஒவ்வொரு பெண்ணும் ஆழ்வார்கள் காட்டும் தலைவியரில் தன்னைதான் காண்பாள்.

பக்தியின் அடிப்படையில் பாடப்பட்டதாயினும் திவ்ய பிரபந்த பாசுரங்களிலும் வலுவான காதல் உணர்ச்சி இடம் பெற்றிருப்பதைக் காண்கிறோம். அடிப்படையில் இறைவனுக்காக ஏங்கும் ஒரு பக்தனின் மனநிலையை விவரிப்பதாக இருந்தாலும், தன் தலைவனை பிரிந்து வாடும் தலைவியின் தவிப்பு எவ்வாறு இருக்குமென்பதை இதுவரை கண்டோம்.



# 8. நம்மாழ்வார் காட்டும் நம்பெருமான்

**முன்னுரை:**

உயர்வு அறு உயர்நலம் உடையவன், மயர்வு அற மதிநலம் அருளினன், அயர்வு அறும் அமரர்கள் அதிபதி எவனோ அவனுடைய துயர் அறு சுடர் அடி தொழும் நம்மாழ்வார் பெருமானின் குணநலன்களை பலவிதமாக அனுபவிக்கிறார் அவன் குழப்பமில்லாத ஞானமுடைய தேவர்களையும் மயங்க செய்யும் அவதார குணங்களையுடையவன், அவனின் மாயச் செயல்கள் வானைவிட பெரியவை என்கிறார்.

அவர் மட்டுமல்ல, வேதியர்களை இட்டு நிறுவப்படும் எல்லா வேதங்களும் உலகிலுள்ள பலவகை நூல்களும் பொய் கலவாமல் அவனுடைய குணச் சிறப்புகளையே போற்றிப்பாடுகின்றன.

மனிதர்கள் காலமெல்லாம் அறிவுகெட்டு சம்சாரம் என்னும் பெரும் புதரில் அகப்பட்டு வினைகளாகிற பாவங்களால் பிணிக்கப்பட்டு வழி தெரியாமல் கூவிக்கூவி தடுமாறுகிறார்கள். அவர்களைப் பார்த்து பரிதாபப்பட்ட நம்மாழ்வார், தான் உணர்ந்த பெருமானுடைய குணநலன்களை அவர்களும் புரிந்து கொண்டு அவனை அடைய வேண்டுமென்ற ஆவல் கொள்ள வேண்டுமென்று விரும்பினார். எனவே தன் பாசுரங்களில் ஆங்காங்கு அவன் என்னென்ன விதத்தில் எங்கெல்லாம் நிறைந்திருக்கிறான் என கூறியவர், அவன் யாருக்கெல்லாம் அடைவதற்கு அரியவன், யாருக்கெல்லாம் எளியவன் என்பதையும் நமக்குத் தெளிவாக்குகிறார்.

கரும்பை கடித்துச் சாப்பிட கஷ்டப்படுபவர்களிடம் கருப்பஞ்சாறை கையில் தருவது போல, அடைய அரியவனான அவனை அறிய எளியவனாக்க எவ்வாறு நமக்கு நம்மாழ்வார் உதவுகிறார் என இப்போது பார்ப்போம்.

**அவன் யார்?**

திருமால் அமரர்களாகவும் உலகத்து அஃறிணை பொருட்களாகவும் உயர்திணை பொருட்களான ஆத்மாக்களாகவும் தானே ஆகி பொருந்தி நிற்கிறான் (2923) அத்தோடு அவன் வானமும் அதில் ஒலியாகவும், தீயும் அதன் வெம்மையாகவும், காற்றும் அதன் மிடுக்காகவும், நீரும் அதன் குளிர்ச்சியாகவும், நிலமும் அதன் பொறுமையாகவும் இருக்கிறான் (2909) என கூறும் நம்மாழ்வார் வேறொரு பாசுரத்தில், ஒப்பில்லா பொறுமையுடைய பூமி, குளிர்ந்த நீர் தத்துவமான கடல், வெம்மையான நெருப்பு, காற்று, நிலை பெற்ற ஆகாயம், ஒளி உடைய சந்திரன் சூரியன் என்னும் சுடர்களாக பெருமான் இருக்கிறான் (3154) எனவும் கூறுகிறார்.

அது மட்டுமல்ல, எல்லை இல்லாத இன்பங்களைப் பெற்றவனும் தனித் தலைவனும் ஆன இறைவன் வெல்லம், தேன், அமுதம், பால், பழம், கரும்பு ஆகியவற்றின் சுவையாகவும் உள்ளன (3222) என கூறி, இறைவன் இனிமையானவன் மட்டுமல்ல, இனிப்பானவனும் கூட என நமக்கு விளங்க வைக்கிறார்.

பிறகு அதே பெருமானை எதிர் எதிர் பொருளாகவும் பார்க்கும் அவர், வறுமையும் அதன் எதிரான செல்வமும் அவனே, நரகமும் சொர்க்கமும் அவனே, பகைமையும் நட்பும் அவனே, நஞ்சும் அமுதமும் அவனே (3473) என்றும் காணும் இன்பங்களும் துன்பங்களுமாய், கலக்கமும் தெளிவுமாய், கோபத்துடன் குளிர்ச்சியாய், நெருப்பாகவும் நிழலாகவும் அவனே உள்ளான் (3473) எனவும் கூறுவது சுவையாக இருக்கிறது.

இதே கருத்தில், அவனே ஞானமாகவும் அறியாமையாகவும், பரந்துள்ள ஒளியும் இருட்டுமாகவும், நிலமும் வானமுமாகவும் காட்சியளிக்கிறான் (3475) எனவும் புண்ணியமும் பாவமும் சேர்க்கையும் பிரிவும் (3476) வஞ்சனை-நேர்மை, கறுப்பு-வெளுப்பு, உண்மை-பொய், இளமை-முதுமை, புதுமை-பழமை ஆகிய எதிர் எதிர் குணங்களாகவும் அவனே உள்ளான் (3477) எனவும் நம்மாழ்வார் எடுத்துரைக்கிறார்.

மகிழ்ச்சி-கோபம் இரண்டும் அவனே, பூவில் உள்ள திருமகள்-மூதேவி இருவருமே அவன் தான். புகழும் பழியும் அவனே (3478) என்ற ஆழ்வார் 'நிழல் வெய்யில் சிறுமை பெருமை, குறுமை நெடுமையும் ஆய் சுழல்வன நிற்பன மற்றும் ஆய் அவை அல்லனும் ஆய்' (3482) என்றும் 'திங்களும் ஞாயிறும் ஆய், செழும் பல்சுடர் ஆய், இருள் ஆய், பொங்கு பொழி மழை ஆய், புகழ், ஆய், பழி ஆய், பின்னும் நீ வெம் கண் வெம் கூற்றமும் ஆம்' (3639) என்றும் கூறி தன் கருத்தை வலியுறுத்துகிறார்.

அத்தோடு மறதியான அவனே தெளிவும் ஆகிறான், நெருப்பாய் தோன்றும் அவனே குளிர்ச்சியாய் உள்ளான். வியப்பு, வியப்பு பொருள், வெற்றி, புண்ணியம், பாவம் ஆகியவைகளாயும், செயல்களாகவும் இருக்கிறான் (3643) 'உன்னுசுவை, ஒளி, ஊறு, ஒலி, நாற்றம் முற்றும் நீயே' (3646).

அத்தகையவனை 'கறந்த பால்! நெய்யே! நெய்யின் இன்சுவையே! கடலினுள் அமுதமே! அமுதில் பிறந்த இன்சுவையே! சுவையது பயனே' (3677) எனவும் ஆழ்வார் போற்றுகிறார்.

இவ்வாறெல்லாம் அவன் குணத்தின் ஒரு பரிமாணத்தை விவரித்தவர், முடிவாக அவன் விரும்பிய காலத்தில் விரும்பிய வடிவில் வருவான் (பேணுங்கால் பேணு உரு ஆகும் அல்லனும் ஆம் - 3062) என்கிறார் அதைவிட சுவையானது திருமால் தன் தன்மைகளைத் தானே அறியான் (3709) என ஆழ்வார் கூறுவதுதான்.

## அடைவதற்கு அரியவன் அடியார்க்கு எளியவன்

இப்படியெல்லாம் பலவிதமாக பரந்து நிறைந்துள்ள பகவானை பார்க்க வேண்டும் என அடியவர்கள் ஆசைப்படுவது இயற்கை. அதற்காக அவர்களின் காமம், கோபம் முதலியன அகன்று, மனம் மலர்வதால், உண்டாகும் ஞானத்தால் அவனை அடைந்து விடலாம் என நினைத்தால் அது தவறு, அவ்வாறு அவனை அடையமுடியாது என்கிறார் ஆழ்வார். முற்றிலும் ஞானம், ஆனந்தம் ஆகிய வடிவானவனை, வருங்காலம் நிகழ்காலம், இறந்த காலம் ஆகிய முக்காலங்களிலும் ஒப்பற்றவனை, ஐம்புலன் அறிவால் அளவிட முடியாது என்கிறார் அவர்.(2900)

அது மட்டுமல்ல, நிற்றல், இருத்தல், கிடத்தல், திரிதல் ஆகியவை நடைபெற காரணம் ஆன அவனே நில்லாமை, இராமை, கிடவாமை, திரியாமை ஆகியவற்றுக்கும் காரணமாவதால் அவன் இப்படிப்பட்டவன் என நினைக்க அரியவன் (2904) எனவும் கூறுகிறார்.

எனவே பெருமானை சரியாக புரிந்து கொள்ளாதவர்களுக்கு, அவனிடம் சரண் அடையாதவர்களுக்கு அவனை அடைவது அரிது. அதாவது பக்தி உடைய அடியார்களுக்கு எளியவனாயும் அல்லாத பிறருக்கு அணுக முடியாதவனாயும் உள்ளான் 'என்பதை பத்து உடை

அடியவர்க்கு எளியவன் பிறர்க்கு அரிய வித்தகன்' (2921) என கூறி விளக்குகிறார் நம்மாழ்வார்.

ஆக, எத்தகைய உயர்ந்தவரும் தம் சுயமுயற்சியால் அவனைக் காண விழைந்தால், இறைவன் அவர்களால் அறிய ஒண்ணாதவன் அவர்கள் அவனையறிய ஒரு பெயரும் ஓர் உருவமும் கூட இல்லை (2924) தன் முயற்சியால் காண்பார்க்கு தூரத்தேயும், அவனருளால் காண விரும்புவோர்க்கு அருகிலேயும் உள்ளான். எத்தனை ஞானம் உடையாராலும் காண அரியவனான அவன் யசோதை முதலியோர்க்கு எளியவன் (2992)

அதுவுமில்லாமல் உணர்வு, ஞானம், ஒளியுடன் அணு அளவாய் உடலினும் வேறுபட்ட ஆத்மாவை கூட நம் அறிவால் அறியலாம். ஆனால் இறைவனை அறிய முடியாது (உணர்ந்து உணர்ந்து உணரிலும் இறைநிலை உணர்வு அரிது உயிர்காள் - 2926)

'இன்னது ஓர் தன்மையை என்று உன்னை யாவர்க்கும் தேற்றரியை' (3645) 'ஆம் வண்ணன் இன்னது என்று அறிவது அரிய அரியை' (3648) என ஆழ்வார் பாடியதும் இதே கருத்தை வலியுறுத்தவே!

மேலும் ஆத்மாக்கள் பயன்களை விரும்பி எம்பெருமானை விட்டு அகன்றால் அவனும் அகன்றே நிற்பான். பயன்களை எதிர்பாராமல் அவனையே அடைய விரும்புவோர் அணுகினால் அவன் அவர்களைச் சார்ந்தே நிற்பான். பகைவரால் அணுகுவதற்கு அரியவனான அவன், அடியார்களுக்குத் தடையின்றி தன்னைத் தருவான் (2974) எனவும் அவர் கூறுகிறார்.

எனவே அவனை அடைய விரும்புவோர் பரமபக்தியுடன் வணங்கினால் போதும், கண் முன்னே அவன் நிற்பான். ஒன்று,

இரண்டு என எண்ணி முடிப்பதற்குள் காட்சி தரும் அவன் எளிமையை உணர்ந்த பின் அவனிடம் யாசித்து பெற வேண்டியது வேறு என்ன உள்ளது? (2999)ள

அப்படிப்பட்ட துன்பத்தைக் கண்டு பரிவுகொண்ட பகவான் அடியார்களை அரவணைக்க, அழியக்கூடிய தாழ்ந்த மானிட இனத்தில் பிறக்கவும் தயங்கவில்லை, தன் விருப்பத்திற்கேற்றபடி தக்க வடிவங்களை எடுத்து அடியார்களின் விரோதிகளை அழித்து, அதனால் தன் கோபம் தீர பெறுகிறான் (3490) எனவும் எடுத்துரைக்கிறார் ஆழ்வார்.

ஆக எம்பெருமானே அடைய வேண்டியவன், அவனே அதற்கு உபாயம், அற்று தீர்த்த அடியார்களின் தடைகளை நீக்கி அவனே ஆட்கொள்ளுகிறான் (3175) என்பது தெளிவாகிறது. அதனால்தான் பரமபதத்தில் துயரமே இல்லாத ஒளிமயமான சுத்த சத்வ உருவத்தில் விளங்கும் அவன், உலகில் உள்ள ஊன கண்கள் காணும்படி மனித வடிவில் அவதாரம் எடுத்தும் அருள் செய்கிறான்.(3225)

**அருட்செயல்கள்**

அளவற்ற ஆனந்தத்தைத் தரும் அருளாளனின் அற்புத செயல்கள் என்னென்ன என பார்ப்போம். உயர்வுகளுக்கெல்லாம் மேம்பட்ட உயர்வானவன் அஞ்ஞானம் அழியும்படி ஞானத்தையும் பக்தியையும் அருள்பவன் (2899) பூவுலங்களிலும் மேலுலகங்களிலும் உருவுடைய அசித்துகளையும் உருவில்லாத சித்துக்களையும் தன் உடைமைகளாக பெற்றவன். புலப்படும் பொருட்களில் அவன் கலந்து நின்றாலும், அவற்றின் இயல்புகளையும் கடந்து அவற்றை நியமிப்பான்.

உடல் உறுப்புகளில் மறைந்தவாறே ஆத்மா உடலை தாங்குவது போல, எல்லாவற்றின் உள்ளும் புறமும்

பரந்துள்ளவனான அவன் உலக முடிவிலும் அவற்றை அடக்கி மறைக்கிறான் (2905) சிவனுக்கும் பிரமனுக்கும் உள்ளே இருந்து நியமிப்பவனும் அவனே (3539) மண், நீர், தீ, காற்று, வானம் ஆகிய ஐந்திலும் பல்வேறு ஜீவன்களிலும் பொருட்களிலும் தங்கி அவற்றை நடத்துகிறவனும் அவனே (3617)

அது மட்டுமல்ல, தேவர்களாலும் அறிந்து கொள்ள இயலாத மூலப்பகுதிக்குக் காரணமான இறைவன், பிரளயத்தில் எல்லாவற்றையும் தன் வயிற்றில் வைத்து காக்கிறான் (2906)

அத்தோடு சேதனங்களான அறிவுள்ள உயிர்களையும் அசேதனங்களான அறிவற்ற பொருட்களையும் பிரளயத்தில் ஒன்றுக்கொன்று நெருக்கடியில் அடிபடாமல் தன் வயிற்றில் வைத்து காப்பாற்றுபவன் (3025) என்றும் கூறுகிறார்.

சேமநிதி போன்ற எம்பெருமான் அடியார்கள் ஐம்புலன்களால் வருந்தாதபடி செய்து, அவர்கள் வினைகளை நீக்கும் மருந்தாக உள்ளான். அதனால் எல்லா இடங்களிலும் எல்லோரையும் விட ஆனந்தத்தால் மேம்பட்டு மேன்மேலும் உயர்ந்து நிற்கிறான் (2966)

மேலும் நாவால் கூறப்படும் ஞான கலைகளுக்கெல்லாம் எம்பெருமானே உயிரும் உடலும் ஆகிறான். அவற்றை ஆக்கி, காத்து, அழிப்பவனும் அவனே! (2994) அவனை வணங்கி வந்தால் வருங்காலத்தில் எவ்வித நோயும் நம்மை சாராமல் அவன் தவிர்ப்பான் தாயும் தந்தையுமாக அன்பு காட்டுவான் (3003)

தன்னை ஒத்தவரும் தன்னை விட உயர்ந்தவர்களும் இல்லாத அவன் ஆச்சரியமான குணங்களையும், செயல்களையும், உடையவன். எல்லாவற்றுடனும் ஒத்து அவதாரம் செய்யும் அவனே நம் தலைவனாய், உயிராய் தாயாய் தந்தையாய் இருந்து நாம் அறியாதவற்றை அறிவிக்கிறான் (3032) என்கிறார் நம்மாழ்வார்.

ஏழுலகங்களையும் படைத்து காக்கும் இறைவனே வேதத்தின் வடிவமும் பொருளுமாக இருக்கிறான். அவனே காரண பொருளாக உபாயமாகவும் அதன் பயனான உபேயமாகவும் உள்ளான் (3076) பிறவிக் கடலை கடக்க நீந்துபவர்க்கு அவனே தெப்பக் கட்டையாக இருந்து உதவுகிறான். (3088)

இடைவிடாமல் துன்பம் தரும் பிறவி தொடக்கமானவற்றில் சிக்கும் ஆத்மாக்களைப் புறக்கணியாமல் எம்பெருமான் சோம்பல் இன்றி மூவுலகங்களையும் படைத்து காப்பாற்றுகிறான் (3092) மேலும் உடலில் தங்கும் ஆத்மாவுக்கு வளர்தல் குறைதல் ஆகிய மாற்றங்கள் ஏற்படாதது போலவே, ஆத்மாவின் இன்ப துன்பங்கள் அதற்குள் தங்கும் எம்பெருமானுக்கும் உண்டாவதில்லை (3163)

அதாவது துயரத்தைத் தரும் புண்ணிய பாவச் செயல்களை நியமிப்பவனாக அவன் இருந்தாலும், அவற்றுக்கு ஆட்படாத தனி தலைவன் ஆவான் (3183)

கால காலத்துக்கும் விடாமல் உடலில் தங்கி இன்ப துன்பம் அடையும் ஆத்மாக்கள் பிறவாதிருக்க வேண்டுமென்று அவன் மறுபடி மறுபடி உலகைப் படைக்க ஒருப்படுகிறான். (3218) இன்பமில்லாத நரகத்திற்கும் இனிமையான சொர்க்கத்திற்கும் தலைவனான அவன் உயிர்களுக்குள்ளே புகுந்து நின்று நியமிக்கிறான், உலகோர்க்கு மயக்கங்கள் உண்டாகுமாறு மாய செயல்கள் செய்து விளையாடுகிறான் (3226).

சாதியில் ஒத்தவர் வடிவில் வேறுபடுவதும், ஞானத்தில் ஒத்த ஆத்மாக்கள் நான், நீ என்று நிலைகளில் வேறுபடுவதும் அவனுடைய மாய செயல்களே (3640) அதனால்தான் 'எல்லை இல் ஞானத்தன் ஞானம் அஃதே கொண்டு எல்லா கருமங்களும் செய் எல்லை இல்மாயன்' (3228) என்கிறாரோ நம்மாழ்வார்?

அது மட்டுமல்ல, பாற்கடலில் நஞ்சுடைய நாகம் மேல் பள்ளி கொண்டவாறு அவன் உலகை காப்பாற்ற சிந்திக்கிறான். (3641) அப்பொழுது பலவகை பட்டவர் தாம் அறிந்தபடி கடவுள்களை வழிபடுவர். அவரவர் கடவுகள்கள் பலன்களைக் கொடுப்பதில் குறைவற்றவர்களே. ஏனெனில் அவரவர் நெறிகளில் கூறப்பட்ட விதிப்படியே பலன்களைக் கொடுக்க பகவான் அந்தந்த தேவதைகளுக்கு உள்ளே இருந்து அருள் புரிகிறான் (2903)

இவ்வாறெல்லாம் இறைவனின் அருட் செயல்களை அழகாக விவரிக்கிறார் நம்மாழ்வார்.

## முடிவுரை

நம்மாழ்வார் எடுத்து காட்டும் குண நலன்களையுடைய இறைவனின் தன்மை அஞ்சதக்கது அன்று அது அன்புடன் கூடிய இணக்கமே வடிவானது, நட்புக்கென்றே உள்ளது (2915). நம் பகவான் கல்யாண குணங்களும் எல்லையற்ற ஆனந்தமயமான நலமும் உடையவன். 'கொள்ள மாளா இன்ப வெள்ளம் கோது இல தந்திடும் என் வள்ளலேயோ' (3298) என மனமுருகி பாடுகிறார் ஆழ்வார்.

குணமுடையோரை ஏற்பதும் குணமில்லாதாரைக் கைவிடுவதும் ஆகிய ஒரு தலை சாய்தல் அவனிடம் இல்லை. விருப்பு வெறுப்புகளுக்கு அப்பாற்பட்டவன், பயன் எதிர்பாராமல் தன்னை பற்றும் அடியார்களிடத்தே இனிய அமுதம் போன்று இருப்பான் (2958) மேவி நின்று தொழுவார் வினை போக மேவும் பிரான் (3278) என்பதையெல்லாம் ஆழ்வார் அழகாக அறிவுறுத்தியுள்ளார்.

எனவே இக்கட்டுரை மூலம் பெருமான் எத்தகையவன், அவன் குணநலன்கள் என்ன, அருட்செயல்கள் யாவை போன்ற பல அழகான விஷயங்களை நம்மாழ்வார் எவ்வாறு விவரிக்கிறார் என்பது நமக்குத் தெளிவாகிறது.

